# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



ஜூன் 1981

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற் சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப் போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி

8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.

8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.

மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன.

இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)

7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன

8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)

9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன

10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம் மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன.

8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)



आपन्नार्तिप्रशमनविधौ बद्धदीक्षस्य विष्णोः
आचख्युस्त्वां प्रियसहचरीमैकमत्योपपन्नाम् ।
प्रादुर्भावैरपि समतनुः प्राध्वमन्वीयसे त्वं
दूरोत्क्षिप्तैरिव मधुरता दुग्धराशेस्तरङ्गैः ॥

ஆபந்நார்த்தி ப்ரஶமந விதௌ பத்த தீக்ஷஸ்ய விஷ்ணோ:
ஆசக்யுஸ் த்வாம் ப்ரியஸஹசரீமைகமத்யோபந்நாம்।
ப்ராதுர்பாவை ரபி ஸமதநு: ப்ராத்வமந்வீயஸே த்வம்
தூரோத்க்ஷிப்தைரிவ மதுரதா துக்தராஶேஸ் தரங்கை: ॥

தாயே, நீ அவதரித்த திருப்பாற் கடல் அலைகள் எவ்வளவு தூரம் வீசினாலும், அதிலுள்ள இனிப்பு அதைவிட்டு அகலாமல் இருக்கின்றது அல்லவா? அதுபோல், உன் நாயகன் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து எந்த உலகத்துக்கு வந்து எந்த அவதாரம்செய்தாலும், நீயும் அதற்கு ஏற்ற மாதிரி அவதாரம் செய்து, துணையாக இருக்கிறாய். நீ இல்லாவிடில் மக்களைக் காத்தல் என்பது முடியாது. உன்னால்தான் அவனுக்குப் பெருமை:

ஸ்ரீ சுவாமிதேசிகன் - ஸ்ரீஸ்துதி - 10



# ஸப்தகிரி


ஜூன் 1981

மலர் 12
இதழ் 1

தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6





முழு விவரங்களுக்கு:
EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.


## உள்ளுறை



*29-ம் பக்கம் கட்டுரை ஆசிரியர் திரு. ஆர். சாதுகிருஷ்ணன்,*
*திருநெல்வேலி.*



# செய்திச் சுருக்கம்



## புதிய கூரை

திருமலைக்கு, திருப்பதியிலிருந்து நடந்து செல்வதாக பல யாத்திரிகர்கள் வேண்டிக் கொண்டு, அதன்படி ஆயிரக்கணக்கான பக்தர்கள் திருமலைக்கு நடந்து செல்லும் காட்சியை நாள் தோறும் கண்ணுறலாம். இவ்வகையில், யாத்திரிகப் பொதுமக்கள் பயனுறும் வகையில் திருமலை அலிபிரியிலிருந்து திருமலை வரை நடந்து செல்லும் வழி நெடுகிலும் (நடைபாதை முழுவதற்கும்) கூரை வேய்வதற்கு மேலாண்மை தகுந்த முயற்சிகளை மேற்கொள்ள உள்ளது. இதன்படி முதல் கட்டமாக, அலிபிரியிலிருந்து காலி கோபுரம் வரையிலும், முழங்கால் மேடு என்ற பகுதியில் ஒரு சிறிது தூரத்திற்கும் அதாவது 2 கி.மீ. தொலைவிற்கும் கூரை வேய ரூ. 20 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

## கோடைப்பள்ளி

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் இவ்வருடத்திற்கான இந்து சமயக் கோடைப்பள்ளி 1-5-81 முதல் 15-5-81 வரை நடைபெற்றது. இதற்கான ஆரம்ப விழா 1-5-81 அன்று காலை தி. தி. தே. கீழ்த்திசைப்பள்ளி அரங்கில் நடைபெற்றது. விழாவிற்கு வருகை புரிந்தோரை வரவேற்றுப் பேசிய, டாக்டர். டி. அர்க்கசோமயாஜி அவர்கள் இவ்வாண்டு கோடைப்பள்ளிக்கு 100 ஆசிரியப் பெருமக்கள் கலந்து கொண்டுள்ளார்கள் எனக்குறிப்பிட்டு, இன்றைய கல்வி முறையில் சமய உணர்வினைத் தோற்றுவிக்கும் வகையில் எந்த விதமான முயற்சிகளும் இல்லை என்று சுட்டிக் காட்டினர். பின்னர் சிறப்பு விருந்தினராக, தி. தி. தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். ராவுல சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் விழாவில் பங்கேற்று உரையாற்றுகையில் ஆசிரியப் பெருமக்களின் பொறுப்பினையும், கடமையினையும் விளக்கிக் கூறினர். பிறகு இக்கோடைப் பள்ளியினைத் துவக்கி வைத்துப் பேசிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர்.கே. பிரஸாத் அவர்கள் சாமானியரும் பயனுறும் வகையில் வேதங்களில் காணப்படும் இந்து சமயச் சடங்குகளின் முக்கியத்துவத்தை, சடங்கு மந்திரங்களின் பொருளினை அந்தந்த வட்டாரமொழிகளில் வெளியிட்டால், நோக்கம் நிறைவேறும் என்றும், அப்போதுதான் வேதங்களின் பெருமையை உணர முடியும் என்றும் கூறினர். இறுதியில், இந்து தர்மரக்ஷண சமஸ்தாவின் முக்கிய அலுவலர் திரு. லக்ஷ்மணய்ய நாயுடு அவர்களின் நன்றி நவிலலுடன் ஆரம்ப விழா இனிது முடிவுற்றது.

## தெப்போற்சவம்

திருப்பதியிலிருந்து 4 கி.மீ. தொலைவிலுள்ள, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் துணைப்பெண் தெய்வமான ஸ்ரீ பத்மாவதி தாயார் கொலு வீற்றிருக்கும் திருச்சுகனூர் என்று புராணங்களால் அழைக்கப்பட்ட திருச்சானூரில் அக்கோயிலின் தெப்போற்சவம் இம்மாதம் 13-ம் தேதியிலிருந்து 17-ம்

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

### காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| 1. | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| 2. | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ: 10/- |
| 3. | டி. பி. சி. 3வது வரிசை (அறைத் தொகுதிகளைக் கொண்ட காட்டேஜ்) | |
| | ஹீட்டர் வசதி கொண்டது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |
| 4. | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| 5. | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| 6. | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| 7. | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ: 15/- |
| 8. | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 9. | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 15/- |
| 10. | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 15/- |
| 11. | திருமணத்திற்கான காட்டேஜ் | ரூ. 30/- |

தேதி வரை வெகு விமர்சையாக நடைபெறும்.

## ஸாக்ஷத்கார வைபவம்

திருப்பதியிலிருந்து 10 கி. மீ. தொலைவிலுள்ள மங்காபுரத்தில் இருக்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமியின் ஸாக்ஷத்கார வைபவம், கோயில் அரங்கத்தில் 7-7-81 அன்று வெகு விமர்சையாகக் கொண்டாடப்படும். ஸ்ரீ வேங்கடேஸ்வரர் ஸ்ரீ பத்மாவதி அம்மையாரை நாராயணவனத்தில் திருமணம் செய்து கொண்டபின், புதிதாக மணஞ்செய்து கொண்ட தம்பதிகள் திருமலைக்குச் செல்லுதல்கூடாது என்ற ஒரு தடை நிலவியிருந்ததால், சிறிது காலம் அவர்கள் இந்த மங்காபுரத்தில்தான் தங்கியிருந்ததாக உள்ளூர் புராணங்கள் கூறுகின்றன.

இவ்விழாவின்போது, அழகிய சிற்ப வேலைப்பாடுகள் மிகுந்த, சரித்திரப் புகழ் வாய்ந்த இக்கோயிலில், அன்று மாலை, சமயம் சம்பந்தப்பட்ட இசை நிகழ்ச்சிகளும், கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும். ஆகவே யாத்திரிகப் பொது மக்கள் இதனை ஓர் அரிய வாய்ப்பாகக் கொண்டு, இத்தலத்திற்கு வருகை புரிந்து, திருமலையில் உள்ளதைவிட அதிக உயரமான இம் மூலவரைத் தரிசித்து, இறையருள் பெறுவார்களாகுக.

## ஆனிவார ஆஸ்தானம்

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் நடைபெறும் மூன்று முக்கிய 'தர்பார்' விழாக்களில் ஒன்று, 16-7-81 அன்று நடக்கும் ஆனிவார ஆஸ்தானமாகும். இது போது, இறைவன் விலையுயர்ந்த ஆபரணங்களான லக்ஷ்மீ ஹாரம், மகர கண்டிகை, கிரீடம், ஹஸ்தம் ஆகியவற்றுடன் திகழுவார். இவ்விழா சாதாரணமாக தமிழ் ஆனி மாதத்தின் இறுதி நாளன்று நடைபெறும். அப்போதைய ஆண்டின் வரவு செலவு கணக்கு விவரங்களை முடிவு செய்து, புதியஆண்டின் கணக்குகளை ஆரம்பிப்பதைக் குறிப்பதாக இவ்விழா அமையும்.

## 7-வது ஆண்டு விழா

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா பார்வையற்றோர் மற்றும் காது கேளாதார் பள்ளியின் 7-வது ஆண்டு விழா வெகு சிறப்பாக 22-4-81 அன்றுபள்ளிஅரங்கில்நடைபெற்றது. இதனை ஒட்டி அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. கல்வி அலுவலர் திரு. பி. ரங்கய்ய அவர்கள் வரவேற்க, விழாவிற்குச் சித்தூர் மாவட்ட அரசு கல்வி அலுவலர் திரு. டி. ஜி. சஞ்சீவராவ் அவர்கள் தலைமை வகிக்க தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு.பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். பள்ளி முதல்வர் திரு. தல்பஸாயி அவர்கள் பள்ளியின் ஆண்டறிக்கையினை வாசிக்கையில், பள்ளிக்குத் தேவையான மேலும் பல வசதிகளை குறிப்பிட்டார். அரசு கல்வி அலுவலர் தன் தலைமையுரையில், பள்ளிக்குத் தேவையான உதவிகளை வழங்க அரசு சார்பில் உறுதி அளித்ததைத் தொடர்ந்து, பள்ளியில் மேலும் பல மாணவர்களைசேர்த்துக்கொள்ளவும், ஆசிரியர்களுக்கு பள்ளிக்குத் தேவையான தகுந்த பயிற்சிகளை வழங்கவும் தகுந்த நடவடிக்கைகளைமேலாண்மை மேற்கொள்ளும் என்று தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தன் சிறப்புரையில் குறிப்பிட்டார். பின்னர் பள்ளி தன் மாணவர்களுக்கிடையே நடத்திய பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்கு, தி. தி. தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி அவர்கள் பரிசுகள் வழங்க, இறுதியில் அப்பள்ளி மாணவ மாணவிகள் பங்கேற்ற கலை நிகழ்ச்சிகள் இடம் பெற்றன.

## காஞ்சியில் அதிருத்ர ஹோமம்

முத்தி தரும் நகர் ஏழினுள் முக்கியமானது காஞ்சி. காஞ்சிபுரத்தில் 5-5-81 முதல் 10-5-81 முடிய ஆறு நாட்களாக அதிருத்ர ஹோமம் வெகு சிறப்பாக நடை பெற்றது. அருள்மிகு. ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் நடை பெற்ற அதிருத்ர ஹோமத்தை முன்னின்று நடத்தியவர் திருவேற்காடு ஐயப்ப சுவாமிகள். பெரும் பொருட் செலவில் நடைபெற்ற இந்த ஹோமத்தைக் கண்டு நலம் பல பெறுவதற்குத் தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் அன்பர்கள் வந்த வண்ணமிருந்தனர். உலக மக்களின் நன்மை, மழைவளம்,பசி,பிணி முதலிய பயமின்மை, அமைதி, பேரின்பம் முதலான குறிக்கோள்களுக்காக இந்த ஹோமம் நடத்தப்பட்டது. இசை மாமணி சீர்காழி கோவிந்தராஜன், கலைமாமணி. மதுரை. சோமசுந்தரம் ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகள் சிறப்பாக நடைபெற்றன. 10-5-81 ஞாயிறு மாலை 2 மணிக்கு மேல் ஏகாம்பரநாதருக்கு மஹா அபிஷேகம் நடைபெற்றது. இரவு பஞ்சமூர்த்தி புறப்பாடு காண்பவர் கண்களுக்குப் பெருவிருந்தாய் அமைந்தது. இந்த ஹோம தினங்களில் ஐயப்ப சுவாமிகளைத் தரிசித்து அருள் பெற்றோர் அநேகர். ஹோமம் தொடங்கிய நாளிலிருந்தே மழை பெய்யத் தொடங்கியது கண்டு, காஞ்சி நகர மக்கள் அதிருத்ர ஹோமத்தின் பெரும் பயனையும் ஐயப்ப சுவாமிகளின் அருளாற்றலையும் குறித்து வியந்து பேசிக்கொண்டனர்.

தகவல்:

கு. யுவராஜ்,
காஞ்சிபுரம்.



# விஞ்ஞானமும் வேதாந்தமும்

'சீலன்'
மதுரை

ஒரு சிறிய புழு. வெயிலின் உஷ்ணம் தாங்க முடியாது மெதுவாக நிழலான பகுதியை நோக்கி ஊர்ந்து செல்கிறது. ஏன்? துன்பம் தவிர்த்து இன்பம் பெற அது முயல்கிறது. அது அதனிடத்து இயற்கையாக அமைந்த தன்மையாகும். துன்பத்திலிருந்து இன்பத்தை நோக்கிய பயணமாக அது அமைகிறது.

ஒரு அறை. அந்த அறையில் ஜன்னலை ஒட்டி ஒரு மண் தொட்டியில் சிறிய பூச்செடி ஒன்று வைக்கப் பட்டிருக்கிறது. தினமும் தண்ணீர் ஊற்றிச் செடி வளர்க்கப்படுகிறது. அந்தச் செடியின் கிளைகள் தாமாகவே ஜன்னல் வழியாக அறைக்குள்ளிருந்து வெளியே தலையை நீட்டுகின்றன. ஏன்? இதற்கு விஞ்ஞானம் ஒரு காரணம் கூறும். செடியின் வளர்ச்சிக்குச் சூரிய ஒளி தேவை. சூரிய ஒளியில் தான் ஒளிச் சேர்க்கை என்னும் செயல் நிகழ்கிறது. அறையினுள் சூரிய ஒளி இல்லையாகையால் ஒளியை நாடிச் செடி, ஜன்னல் வழியாக வெளியே வருகிறது என்பது விஞ்ஞானம் கூறும் விளக்கமாகும். விளக்கம் இந்த முறையில் அமைந்த போதிலும் துன்பத்திலிருந்து இன்பத்தை நோக்கிய பயணமாக செடியின் அந்தச் செயல் அமைகிறது என்று கூறலாமல்லவா!

ஒரு மீன் அகஸ்மாத்தாக தண்ணீரினின்று பிரிந்து தரையின் மீது கிடக்கிறது. ஐயோ பாவம்! அது துள்ளிக் குதிக்கும் காட்சி பரிதாபமாக இருக்கிறது. ஏன் அது அவ்வாறு குதிக்க வேண்டும்? அதனது இயற்கை நிலை நீரில் இருப்பது. தற்காலிகமாக அது நீரிலிருந்து பிரிந்திருக்கிறது; மறுபடியும் அது தனது இயற்கை நிலைக்குப் போக பெரு முயற்சி செய்கிறது. அதனுடைய பரிதாப நிலையைக் கண்டிரங்கி ஒருவன் அதை எடுத்து மீண்டும் நீரில் போட்டு விட்டுச் செல்கிறான். இப்பொழுது அது எல்லையற்ற மகிழ்ச்சி அடைகிறது. ஏன்? மரணத்தை அது விரும்பவில்லை. அது உயிரோடிருக்க விரும்புகிறது. மரணத்திலிருந்து மரணமிலா நிலையை நோக்கிச் செல்லும் அதனுடைய பயணமாக அது அமைகிறது.

ஒரு மனிதன், அவன் உணவு உட்கொண்டு பல நாட்களாய் விட்டன. உடலிலே சக்தியில்லை. கண்ணிலே ஒளி இல்லை. சோர்ந்து ஒரு மூலையில் முடங்கிக் கிடக்கின்றான். ''உயிர் போனாலும் பரவாயில்லை'' என்று எண்ணுகிறான். அந்த வேளையில் எங்கிருந்தோ ஒருவன் வருகின்றான், ''இந்தா! இரண்டு ரொட்டித் துண்டுகள், சாப்பிடு'' என்று கூறி அவற்றை அவனிடம் கொடுத்து ஒரு சில காசுகளையும் கொடுத்து விட்டுச் செல்கிறான். முடங்கிக் கிடந்த மனிதன் தள்ளாடியபடியே எழுந்து உட்காருகிறான். ரொட்டிகளை உட்கொள்ளுகிறான். கிடைத்த காசைக் கொடுத்து ஒரு கப் டீ வாங்கி அருந்துகிறான். உடலிலே ஏதோ ஒரு புத்துணர்ச்சி பிறக்கிறது. ஒளியிழந்த கண் ஒளி பெறுகிறது. அவனது மனம் உணவளித்தவனை வாழ்த்துகிறது. இப்பொழுது இன்னும் பல்லாண்டு வாழ்ந்திருக்க வேண்டும் என்ற ஆசை அவனுடைய மனத்தே அலைமோதுகிறது. சற்று முன்பு இருந்த நிலைக்கும் இப்பொழுதைய நிலைக்கும் இடையில் எவ்வளவு பெரிய வேறுபாடு! என்ன காரணம்? எந்த நிலைமையிலும் மனிதன் மென்மேலும் இன்பத்தைப் பெற விழைகின்றான். துன்பத்தை தவிர்க்க முனைகிறான்.

ஒரு நோயாளி. பல மாதங்களாக அவன் கொடும் பிணியொன்றின் காரணமாக அவஸ்தைப்படுகிறான். இரவு பகல் தூக்கமில்லை. உணவைக் கண்டாலே வெறுப்பு. இடைவிடாத இருமல் ஒருபுறம். என்பு தோல் போர்த்த உடம்பாகக் காட்சி தருகிறான். பார்ப்போர் மனம் கசிந்துருகுமளவுக்கு பரிதாபநிலை. இந்த விதமான சித்திரவதைகளையும் பொறுத்துக்கொண்டிருப்பதைக் காட்டிலும், இறந்து போதல்மேல் என்று கருதும் நிலை. அந்த நிலைமையில் ஒருவர் பிணியாளனிடம் சென்று, ''நண்பா! இத்திராத நோயுடன் இவ்விதம் போராடிக்கொண்டிருக்க விரும்புகிறாயோ? அல்லது இவ்வுலக வாழ்வினின்று விடுபட்டு மறுவுலக வாழ்வை அடைய விரும்புகிறாயா?' என்று கேட்பதாக வைத்துக் கொள்வோம். அதற்கு 'இந்நோய் குணமாகி இன்னும் நெடுநாள் நான் இவ்வுலகில் பற்பல இன்பங்களை அனுபவிக்க விரும்புகின்றேன்' என்பதே அவனது பதிலாக இருக்கும். ஏன்? இறப்பு, துன்பம், பிணி போன்றவற்றை மனிதனாகட்டும், மற்ற உயிர்களாகட்டும் ஒரு போதும் விரும்புவதில்லை. உயிரினங்கள் அனைத்தும் வாழ விரும்புகின்றன. துன்பம் தவிர்த்து இன்பம் பெற முயல்கின்றன. துன்பம் நீக்கி இன்பம் பெறுவதற்கான வழியைத் தான் விஞ்ஞானமும், வேதாந்தமும் காட்டுகின்றன. இன்பம் .பெற வேண்டும் என்ற ஒரே குறிக்கோளை நோக்கியே இரண்டும் அமைகின்றன. இரண்டினுடைய அடிப்படைகளும் அநேகமாக ஒன்று போலவே அமைகின்றன. இன்ப நாட்டமே விஞ்ஞானம், வேதாந்தம் ஆகிய இரண்டினுடையவும் அடிப்படையாக அமைந்த போதிலும் அவற்றிற்கிடையே ஒரு சிறு வேற்றுமை உண்டு.

தற்காலிக இன்பத்தைப் பெற விஞ்ஞானம் வகை செய்கிறது. நிரந்தர இன்பத்தைப் பெற வேதாந்தம் வகை செய்கிறது. குறிக்கிடையே அடையும் வழிமுறைகளில்தான் இரண்டிற்குமிடையே வேறுபாடுகள் உள்ளன.

சென்ற பல நூற்றாண்டுகளிலே மனிதனது அறிவு படிப்படியாக முன்னேற்றம் அடைந்து வந்திருக்கிறது. விலங்கொடு விலங்காக வாழ்ந்த மனிதன் இன்று தனது அறிவுத்திறத்தால் வெகுவாக முன்னேறியிருக்கிறான். பண்டு கனவாகக் காட்சி தந்தவை இன்று நனவாகக் காட்சி தருகின்றன. விண் வெளியிலும் ஆதிக்கம் செலுத்தவல்ல அளவுக்கு அவனது விஞ்ஞான அறிவு ஓங்கி இருக்கிறது. சந்திரனிலேயே மனிதன் இன்று அடியெடுத்து வைத்து விட்டான். அது மட்டுமல்ல. அதற்கும் அப்பால் இன்னும் வெகு தொலைவிலிருக்கும் செவ்வாய் போன்ற கிரகங்களையும் எட்டிப் பிடிக்க அவன் முயன்று கொண்டிருக்கிறான். இன்றைய விஞ்ஞான முன்னேற்றம் அம்முயற்சிகளிலே அவன் வெற்றியும் பெற்று விடுவான் என்ற உறுதியையும் நமக்கு அளிக்கிறது. இந்த அளவிற்குப் பிரமிப்புத் தரும் விஞ்ஞான சாதனைகளின் அடிப்படைக் குறிக்கோள் என்ன என்று ஆராய்வோமாகில் மனிதனது வாழ்வில் மென்மேலும் வசதிகளைப் பெருக்குவதும், அவன் உலகப் பொருள்களிலிருந்து அதிக மதிகம் இன்பம் பெற வகை செய்வதுமேயாகும்.

இயற்கையில் மறைந்து கிடக்கும் சக்தியை மனிதன் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டான் என்பது உண்மைதான். நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் போன்றவற்றை ஓரளவுக்கு அவன் தனது விஞ்ஞான அறிவால் அடக்கி ஆள்கிறான் என்பதும் மறுக்க முடியாததுதான். பொருளின் மிக நுண்ணிய பிரிக்க முடியாத பகுதியே அணு என்று பன்னெடுங்காலம் கருதி வந்த நிலை மாறி, அந்த அணுவுக்குள் அணுவாக இன்னும் பல நுண்ணணுத் துகள்கள் இருக்கின்றன என்ற உண்மையைக் கண்டுபிடித்ததோடு அல்லாமல், அணு பகுக்கப்படமுடியாததொன்று என்ற கருத்தையும் பொய்யாக்கி அணுவைப் பிளந்து அதன்மூலம் அண்டத்தையே அழிக்க வல்ல சக்தியையும் இன்றைய மனிதன் பெற்று விளங்குகிறான் என்பதும் உண்மைதான். ஆனால் எதை நாடி அவன் இத்தகைய சாதனைகளை யெல்லாம் புரிகிறானோ அதை இன்னும் பெற்றானில்லை. அழியாத,மாறாத நிலைத்த இன்பத்தை இவற்றின் மூலமாக அவன் பெறவிழைகிறான். ஆனால் அத்தகைய இன்பத்தை அந்தப் புறப் பொருள்களிலே காணாது திகைத்து நின்றான். இதற்கு என்ன காரணம்? தவறுஎங்குளது என்பதைதாம்ஆராய வேண்டும். விஞ்ஞானம், உலத்தை ஆராயும், உடலை ஆராயும். ஆனால் குறிப்பிட்ட எல்லை வரை சென்றவுடன்அதனுடைய முன்னேற்றம்முற்றுப் பெற்று விடுகிறது. ஏனெனில் அந்த எல்லையில் அது முற்றுப் பெற்றாக வேண்டும். நிலையில்லாத இந்த உலகப் பொருள்களிலிருந்து பெறப் படும் இன்பமும் நிலையில்லாததாகத் தானே இருத்தல் வேண்டும்? எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையாக அமையும் எலக்ட்ரான்கள் வினாடிக்கு வினாடி தங்கள் நிலையை மாற்றிக் கொண்டிருக்கின்றன என்று கூறுகிறது விஞ்ஞானம். அவ்விதம் மாறும் தன்மையுடைய பொருள்களிலிருந்து மாறாத, நிலைத்த இன்பத்தையும் காண வகை அறியாது தத்தளிக்கும் நிலையில் “மனிதா! இதோ! நீ நாடி அலையும் உண்மை இன்பம் இங்குளது' என்று மனிதனுக்கு நிலைத்த இன்பத்தை அடைவதற்கான உறுதியான வழியைக் காட்ட முன் வருகிறது வேதாந்தம். அதாவது விஞ்ஞானத்தின் முடிவு வேதாந்தத்தின் துவக்கமாகிறது:

உலகப் பொருள்களிலிருந்து தான் பெற விரும்பும் உண்மை இன்பத்தைப் பெற முடியாது என்று அறிந்த நிலையில் மனிதன் தன்னைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறான். இப்பொழுது அவனது ஆராய்ச்சி உள்முகமாக அமைகிறது. அதாவது உலகை ஆராய்ந்த அவன் தன்னுள்ளே ஆராய்கிறான். தன்னுள்ளத்தை ஆராய்கிறான் - அதாவது தன்னை ஆராயத் தொடங்குகிறான். இதுவரை புறத்தே அமைந்த பரிசோதனைச் சாலையில் அல்லும் பகலும் ஆராய்ச்சிகள் நடத்திய அவன் இப்பொழுது மனம் எனும் அகவுலக ஆராய்ச்சியில் ஈடுபடுகிறான். இதுவரை ஏன் இதில் அவன் ஈடுபடவில்லை என்பதைக் குறித்து கடோபநிடதத்தில் ஓர் அழகிய சுலோகம் கூறுவதாவது:

“பராஞ்சிகானி வ்யத்ருணஸ் ஸ்வயம்பூ:
தஸ்மாத் பராங்பஸ்யதி
நாந்தராத்மன்!
கஸ்சித் தீர: ப்ரத்யகாத்மானமைக்ஷத்
ஆவ்ருத்தச் சக்ஷு: அம்ருதத்
வமிச்சன்||”

‘உலகைப் படைத்த முழுமுதற் பொருள் புலன்களை வெளி நோக்கிச் செல்லும் தன்மையுடையவனாகவே படைத்தார். எனவே கண் வெளியே யுள்ள சப்தத்தைக் கேட்கிறது. இது போன்று ஏனைய புலன்களும் புறத்தே பாய்ந்து செல்கின்றன. ஆனால் எண்ணற்ற மனிதருள் எவனோ ஒரு தீரன் உண்மை இன்பத்தை அடைய விரும்புவனாக, வெளிச்செல்லும் புலன்களை அந்தர்முகமாக்கித் தனது குறிக்கோளாகிய பேரின்ப நிலையை அடைகிறான்' என மேற்கண்ட சுலோகம் பொருள்படுகிறது.

எனவே வேதாந்தம் அக உலக ஆராய்ச்சியின் மூலம் மனிதனை அவனது குறிக்கோளை அடைய வழி செய்கிறது. வேதாந்தம் என்னும் சொல் வேதங்களின் முடிவு என்று பொருள் படுகிறது. வேதங்களின் முடிவுப் பொருள் பரம் பொருளேயன்றி

(36-ம் பக்கம் பார்க்க)

# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.,
பெருங்கட்டூர்.



பூமியிலே மானிடனாய்த் தோன்றிநன்
நெறிகாட்டிப் புவியோர் வாழக்
காமமிலாச் சற்குணனாய்க் காட்சிதந்த
கார்மேக சீதா ராமா!
தேமருவும் சோலைவளர் தேவதேவா!
மாற்சரிய மனத்தால் உந்தன்
நாமமதை நான்மறக்கும் போதுவந்து
உன்நினைவை நல்கி யருளே!

மாருதிதாசன்.

திருமாலின் திருஅவதாரங்கள் பல. எனினும், பத்து அவதாரத்தினை மட்டுமே சிறப்பித்துக் கூறுவது வழக்கம். இவற்றுள்ளும் இராமாவதாரம் பூர்ணவதாரமாகச் சிறப்பிக்கப்படும். இது ஏழாம் அவதாரம். ஏழு என்னும் எண்ணானது எண் சோதிடத்தில் மிகச் சிறந்ததெனக் குறிக்கப்பெறும்.

இராமாவதாரம் எழில் மிக்கது. இராமன் என்ற சொல்லுக்கு இரம்மியமானவன் — அழகானவன் மனத்தை மகிழ்விப்பன் — எனப் பொருள் கொள்ளலாம். இராமன் கார்மேனியன். கருமையே அழகு! இராமனின் அவதாரமே அழகு; உடல் தோற்றமும் அழகு; உரைக்கும் சொல்லும் அழகு; உணர்த்தும் அறமும் அழகு; பழகும் பழக்கமும் அழகு; பண்பும் அழகு; பணிவும் அழகு; அன்பும் அழகு; அருளும் அழகு; ஆற்றலும் அழகு; ஆண்மையும் அழகு. சுருங்கக் கூறின், இராமாவதாரத்தில் ஆதி முதல் அந்தம் வரை தெய்வீக அழகினையே காண்கிறோம். இதனாலன்றோ ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இராமகாதை இந்நிலவுலகில்நின்று நிலவிவருகிறது!

இராமகாதையை முதலில் கூறியவர் வால்மீகி. வால்மீகி வடமொழியில் இராமகாதையை எழுதினார். பலநூறு ஆண்டுகளுக்குப் பின்னர், ''என்று முளதென் தமிழில்'' கம்பநாடர் இராமாவதாரத்தை அருளினார். கி.பி. பதினாறும் நூற்றாண்டில் துளசிதாசர் இராமகாதையை இந்தியில் இனிக்க இனிக்கப் பாடினார். தற்போது உலகில் பலமொழிகளிலும் இராமகாதை எழுதப்பட்டு ஏற்றம் பெற்று வருகிறது. இராமகாதையை எடுத்தாளாதார் எவரும் இலர்.

''ஓவியத்தெழுத வொண்ணா உருவமுடைய'' இராமபிரானின் திருநாமத்தை உச்சரித்தன்றோ காந்தியடிகள் உயர்வு பெற்றார். இராமபிரானைக் காட்டிலும் இராம நாமம் உயர்ந்தது என்பதை உலகுக்குணர்த்தியவர் ஆஞ்சநேயர்! மக்களை ஈடேற்றும் தாரகமந்திரம் 'இராம' எனும் திருநாமம்! இராமநாமத்தை நல்கிய அவதாரத்தின் வரலாற்றை விரிவாக கூறப்புகுந்தால், அது ஒரு பெரிய நூலாகமாறும்; எனவே, இராமாவதாரக் கதையினைச் சுருங்கக் காண்போம்.

பாருக்குள்ளே நல்லநாடு பாரத நாடு. இந்த நாட்டின் வடபாகத்தில் அயோத்தி என்று ஒரு நகரம் இருந்தது. இதனை ஆண்டு வந்த மன்னர்கள் பலர். இவர்களுள் ஒருவன் தசரதன். தசம் என்றால் பத்து, தரன் என்றால் தேரையுடையவன் என்பது பொருள். பத்துத்திசைகளிலும் தன் தேரைச் செலுத்தித் தன்னிகரற்று விளங்கியவன் தசரதன்!

அரசாட்சிச் செல்வமும், படைச் செருக்கும், அரசர் பலரும் தன்னடியை வந்து தொழும் சிறப்பும்மிக்க தசரதனுக்கும் குறையொன்று இருந்தது. பொன் பெற்றான்! புகழ் பெற்றான்! ஆனால், புன்னகை பூக்கும் புதல்வனைப் பெறவில்லை! எனவே, பிள்ளையில்லாக் குறை மன்னன் மனத்தை வருத்தி வந்தது.

தசரதனின் குலகுரு வசிஷ்டர், புத்திர காமேட்டி யாகம் புரிந்தால் புதல்வன் பிறப்பான் என்றார் குலகுரு. கலைக்கோட்டு முனிவர் என்பார் இந்த யாகத்தைச் செய்துமுடித்தார். யாகமுடிவில் அக்கினி பகவான் அழகுடன் எழுந்தார். அவர் கையில் பொற்கிண்ணம் ஒன்று இருந்தது. அதில் அமுதத்துக்கும் மேலான பாயசம் இருந்தது. பாயசத்தைப் பணிந்து பெற்றான் தசரதன்! தன் மனைவியர் மூவர்க்கும் அதனைப் பகிர்ந்து தந்தான். பாயசத்தை உண்ட மனைவியர் கருவுறலாயினர். பதினொரு மாதங்கள் கழிந்தன.

இதற்கிடையே, விண்ணுலகில் நடைபெற்ற நிகழ்ச்சியை ஒரு சிறிது சுருங்கக் காண்போம். பாற்கடலில் பரந்தாமன் பள்ளி கொண்டிருந்தார்; இரக்கமில்லா அரக்கரின் இன்னலுக்காளான இமையவரும் முனிவரும் சாதுக்களும் பாற்கடலைச் சென்றடைந்தனர். தங்கள் துயர் துடைத்தருளுமாறு பரந்தாமனைப் பரவிப் பணிந்தனர். தங்களுக்கு நேர்ந்துள்ள குறையினை அழுது முறையிட்டனர். அழுதால் அவன் அருளைப் பெறலாமன்றோ!

யோகநித்திரையை விட்டுக் கண் விழித்தார் திருமால். கருடாரூடராய்க் காட்சி தந்தார் கார்மேனி வள்ளல்! மேகமே வடிவெடுத்து வந்தது போன்ற கார்மேனி! தாமரை மலர்கள் பூத்துக் குலுங்குவது போன்று கண்களும் இதழ்களும் கரங்

களும் திருவடிகளும்! ஒரே சமயத்தில் சூரியனும் சந்திரனும் எதிரெதிராகப் பொலிதலைப் போல, செவிகள் இரண்டிலும் குழைகள்! அருகிலேயே இலட்சுமி! பொற்குன்றம் போல் கருடன்! கருடன் மேல் கருணை வள்ளலாம் திருமால்!

அரக்கரால் அமரர்கள் படும் அல்லலைப் போக்கவும், தனக்கொரு மகனில்லையே! என ஏங்கும் தயரதனின் குறையை நீக்கவும் திருவுளங் கொண்டார். தன்னை வந்தடைந்த அமரர் முதலானோர்க்கு ஆறுதல் கூறி அனுப்பி வைத்தார். பூவுலகில் மானிடனாய்த் தோன்றி நன்னெறியை மக்கட்கு உபதேசிக்கத் திருவுளங் கொண்டார்.

திருமாலின் ஆற்றல் தசரத மன்னனின் மூத்த மனைவியாகிய கோசலையின் மணிவயிற்றில் சென்று தங்கியது. ஆதிசேடனின் ஆற்றலும், பாஞ்ச சன்னியம் எனப்படும் சங்கின் ஆற்றலும் இரண்டாம் மனைவியாகிய சுமித்திரையின் வயிற்றில் சென்று தங்கியது: சக்கரத்தின் ஆற்றல் மூன்றும் மனைவியாகிய கைகேயியின் வயிற்றில் சென்று தங்கியது.

இனி, அயோத்திக்கு வருவோம். மனைவியர் வயிற்றில் கருவளரும் நிலை கண்டு மன்னன் களிப்புற்றான். பாயசம் உண்டு பன்னிரண்டு மாதங்கள் ஆயின. சித்திரை மாதம் சுக்கில பட்சம் நவமி திதியோடு கூடிய புனர் பூச நட்சத்திரத்தில் கடக லக்கினத்தில் கோசலையின் மணி வயிற்றிடமாகத் திருமால் திரு அவதாரம் செய்தார். அவதரித்த பெருமானுக்கு இராமன் எனும் நாமம் சூட்டப்பட்டது. பரத, லட்சுமண, சத்துருக்கனர் எனப்பெயர் கொண்ட மூவரும் கைகேயி, சுமித்திரைக்கு நன்மக்களாகத் தோன்றினர். தம்பியர் மூவருடனும் இராமபிரான் சீரும் சிறப்புமாக வளர்ந்து வந்தார். கல்வி கற்கும் பருவம் வந்தது. குல குருவாகிய வசிட்டர் நால்வர்க்கும் கலைகள் பலவற்றையும் கற்றுத்தந்தார். இராமபிரான் வில்வித்தையில் சிறந்து விளங்கினார். மக்கள் வளர்ச்சி கண்டு மன்னன் மனம் பூரித்தான்.

நாட்கள் சில சென்றன. தசரதன் அரியணை மேல் வழக்கம் போல் ஒரு நாள் அமர்ந்திருந்தான், அப்போது, அந்த அவையை நாடி முனிவர் ஒருவர் வந்தார். அவர் பெயர் விசுவாமித்திரர் என்பது. வந்த முனிவரை மன்னன் வணங்கி வரவேற்றான். முனிவர் தான் வந்த காரணத்தை மன்னனிடம் எடுத்துரைத்தார்.

"மன்னர்மன்னா! யாகம் ஒன்று செய்வதற்கு யான் எண்ணியுள்ளேன். யாகத்துக்குத் தடையாக அரக்கர் பலர் வரக்கூடும் என அஞ்சுகிறேன். அவ்வாறு வரும் அரக்கர் என் யாகத்துக்கு இடையூறு பல விளைவிக்கக் கூடும். அரக்கரால் அல்லல் வராமல் காக்க உன் மக்களுள் சிறந்து விளங்கும் இராமனை என்னுடன் அனுப்பி வைக்க வேண்டுகிறேன்"!

முனிவரின் வேண்டுகோள் மன்னனின் செவிகளில் காய்ச்சிய ஈயமாகப் பாய்ந்தது. மன்னனின் மன நிலையை வசிட்டர் உணர்ந்தார். மன்னனை ஒருவாறு தேற்றினார், இராமனை அனுப்பி வைக்குமாறும் எடுத்துரைத்தார். குருவின் வாசகம் கேட்டுத் தசரதன் இராமனை அனுப்பி வைத்தார். இலக்குவனும் இராமனுடன் கானகம் நோக்கிப் புறப்பட்டான்.

செல்லும் வழியில் தாடகை என்னும் அரக்கி எதிரே வந்தாள். தாடகையின் கொடிய குணங்களைப் பற்றி முனிவர் இராமனுக்கு எடுத்துரைத்தார். அப்போது தாடகை முனிவரையும், இராம லக்குவரையும் கொல்லுதற்கு முனைந்தாள். எனவே, இராமபிரான் தன் அம்பொன்றால் அந்த அரக்கியின் ஆயுளை முடித்தார். இராமாவதாரத்தின் முதல் நோக்கம் தீமைகளைக் களைவது! எனவே, அவதார நோக்கம் நிறைவேறத் தொடங்கி விடுகின்றது!

இராமபிரான் வில்லாற்றலை முனிவர் பெரிதும் பாராட்டினார். வில் வித்தையின் சில நுட்பங்களையும், அம்பெய்யும் மந்திரங்கள் சிலவற்றையும் இராமபிரானுக்குக் கற்றுத் தந்தார். பின்னர் வேள்விச் சாலையை மூவரும் அடைந்தனர். வேள்வி தொடங்கியது. சுபாகு, மாரீசன் என்னும் பெயர் கொண்ட அரக்கர் இருவர் வேள்விக்கு இடையூறு செய்ய முற்பட்டனர். இராமபிரான் இதனைக் கண்டார்.

அரக்கரைக் கண்ட இராமபிரானுக்குச் சினம் பொங்கியது. வில்லை வளைத்து நாணேற்றினார். வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு சுபாகுவைக் கொன்று வீழ்த்தியது. மற்றோர் அம்பு மாரீசனை நோக்கிச் சென்றது. மாரீசன் கடலுள் சென்று வீழ்ந்தான். அரக்கரால் எவ்வித இடையூறும் நேரா வண்ணம் வேள்வியை இராமபிரான் காத்து நின்றார். இலக்குவன் அண்ணலுக்குத் துணையாக இருந்தான். எனவே, விசுவாமித்திரர் தொடங்கிய வேள்வி இராமபிரான் அருளால் இனிதே நிறைவேறியது.

இராமபிரானின் அவதார நோக்கத்தை நன்கு அறிந்தவர் விசுவாமித்திரர். தன் வேள்வியை இனிதே நிறைவேற்றித் தந்த இராமபிரானுக்குத் திருமணம் புரிவிக்கக் கருத்துக் கொண்டார். எனவே, இராம இலக்குவரை அழைத்துக் கொண்டு மிதிலை நோக்கிச் சென்றார். செல்லும் வழியில் பெரிய கல் ஒன்று இருந்தது. அந்தக் கல்லின் மேல் இராமபிரானின் கால்துகள் பட்டது. அவ்வளவில் கல் கன்னிகையாக மாறியது. கல்லாக இருந்த அகலிகை இராமபிரானின் திருவடிச் சிறப்பினால் சாபம் நீங்கப் பெற்றாள். அகலிகையின் வரலாற்றை முனிவர் கூற இராமபிரான் கேட்டருளினார். மைவண்ணத் தண்ணலாம் இராமபிரானின் கைவண்ணத்தை முனிவர் பிரான் தாடகை சம்மாரத்தின் போது கண்டு களித்தார்; கால் வண்ணத்தை அகலிகை சாப நீக்கத்தில் கண்டு வியந்தார். பின்னர், மூவரும் மிதிலை சென்று சேர்ந்தனர்.

ஜனகன் என்னும் மன்னன் அப்போது மிதிலையை ஆண்டு வந்தான். அம்மன்னனுக்கு இராமனையும் இலக்குவனையும் முனிவர் அறிமுகம் செய்து வைத்தார். தன் அரண்மனையில் உள்ள சிவதனுசை வளைப்பவருக்குத் தன் வளர்ப்பு மகளாகிய சீதாபிராட்டியைத் திருமணம் செய்து கொடுப்பதாகத் தான் அறிவித்திருப்பதை மன்னன் முனிவருக்கு எடுத்துக் கூறினான்.

முனிவர் இராமபிரானைக் கடைக் கண்ணால் பார்த்தார். குறிப்பறிந்து கொண்ட இராமபிரான் வில்லை எடுத்தார், அவர் வலிமைக்காற்றாது வில் முறிந்தது. பிரிவாற்றாது வருந்தியிருந்த திருமகளின் அவதாரமாம் பிராட்டியின் உள்ளம் குளிர்ந்தது. இச்செய்தி கேட்டுத் தசரதன் மக்கள் புடை சூழ மிதிலைக்கு வந்து சேர்ந்தான். நல்லதோர் நாளில் சீதையை இராமபிரான் திருமணம் புரிந்து கொண்டார். அந்நாளிலேயே பரதனுக்கும் இலக்குவனுக்கும் சத்துருக்கனனுக்கும் முறைப்படித் திருமணம் நடைபெற்றது.

(தொடரும்)




# உதங்கரும் தண்ணீரும்

பாரத யுத்தம் முடிந்தபின், துவாரகைக்குப் போகும் வழியில் பகவான் கண்ணபிரான், உதங்கர் என்ற பிராமணரைக் காண நேரிட்டது. பகவான் தன் தேரை நிறுத்தி அவருக்கு நமஸ்காரம் செய்து பூஜித்தான். பிராமணரும் கண்ணனின் மரியாதையை ஏற்றுக்கொண்டு, கேட்கிறார் :

“மாதவா! நீ பாண்டவ கௌரவர்களிடையே வெகு காலமாக இருந்து வருகிறாய்; அவர்களுக்குள் சகோதர வாஞ்சையைப் பலப்படுத்தினாயா? அனைவரும் நலம் தானா? ”

கண்ணனின் நிலை தர்மசங்கடமாயிற்று. “நான் என்ன முயன்றும், அவர்களிடயே ஒற்றுமை ஏற்படுத்த முடியவில்லை. நான் சொன்னதைக் கேட்காமல், யுத்தமிட்டு அனைவரும் மாண்டுவிட்டனர். புத்தியும், பலமும் இருந்துவிட்டால் போதுமா விதியை வெல்ல ?” என்று கூறிய கண்ணன், நடந்த வரலாறு முழுவதையும் உதங்கரிடம் சொன்னார். இதைக்கேட்ட உதங்கர் தன் கோபமான கண்களுடன் மாதவனை நோக்கி, ‘வாசுதேவ! கௌரவகுலத்தைக் காப்பாற்றாமல் போனாயே; வலுவிலாவது நீ அதைச் செய்திருக்கவேண்டும். கபடமாக யிருந்து, அவர்களின் அழிவுக்குக் காரணமான உன்னைச் சபிக்கப்போகிறேன்” என்று மொழிந்தார்.

உதங்கரின் கோபமான வார்த்தைகளைக் கேட்டு, வாசுதேவன் புன்னகையுடன் சமாதானப்படுத்தினார். “சாந்தம்! சாந்தம! நீர் தபஸ்வி! உம்முடைய தவத்தின் பயனைக் கோபத்தில் இழக்கவேண்டாம். முதலில் நான் சொல்வதைக் கேட்டுவிட்டு, பிறகு சாபத்தைக் கொடும்” என்று மொழிந்தான் கண்ணன்.

கண்ணன் உதங்கருக்குத் தன் ஈஸ்வர அவதாரத்தைக் காட்டினான். “உதங்கரே! உலகைக் காக்கவும், தர்மத்தை நிலைநிறுத்தவும் பல பிறவிகள் எடுக்கிறேன். நான் எந்த அவதாரம் எடுக்கிறேனோ, அந்த அவதார தர்மத்தைஅனுசரிக்கிறேன். தேவ ஜாதியில் பிறக்கும்போது தேவனாகவும், ராக்ஷஸப் பிறவியின் போது ராக்ஷஸனாகவும் அவதரிக்கிறேன். அவிவேகிகளான கௌரவர்களைக் கெஞ்சினேன். மதிமயக்கம் கொண்டு, அவர்கள் என் பேச்சைக் கேட்கவில்லை. பயமுறுத்திப் பார்த்தேன். அதற்கும் இணங்கவில்லை. கோபங்கொண்டு என் விஸ்வரூபத்தைக் காட்டினேன். அதுவும் வீணாயிற்று. அதர்மம் புரிந்து, யுத்தம் செய்து மாண்டு போயினர். பிராமண சிரேஷ்டரே! என் மேல் நீர் அபவாதம் சொல்லக் கூடாது” என்று கண்ணன் விளக்கியதைக் கேட்ட உதங்கர் ஸமாதானமடைந்தார்.

உதங்கரின் ஸமாதானத்தினால் மனமகிழ்ந்த கண்ணன் அவரை நோக்கித் தேவையான வரம் ஒன்றைக் கேட்குமாறு கூறினான். ‘அச்சுதா! உன்னைக் கண்டதே பெரிய பேறு. வரம் எதுவும் வேண்டாம்’ என்று உதங்கர் சொல்லியதைக் கேட்டும், கண்ணன் வற்புறுத்தவே, உதங்கர் மொழிந்தார்: “பிரபுவே! அவசியம் எனக்கு ஏதாவது வரம்கொடுக்க விரும்பினால் நான் எப்போது எந்த இடத்தில் தண்ணீர் வேண்டினாலும் கிடைக்குமாறு வரம் தருவாயாக!” என்றார். இதைக் கேட்ட கண்ணபிரான்,

“அப்படியே ஆகட்டும். தண்ணீர் வேண்டுமென்று என்னை எண்ணி எங்கே நீர் வேண்டினாலும் தண்ணீர் கிடைக்கும்” என்று வரமளித்துவிட்டு துவாரகைக்குப் புறப்பட்டார்.

திரு. வி. ராதாகிருஷ்ணன்,
சென்னை-15.

பிறகு ஒரு சமயம், உதங்கர் தாகம் மிகுந்து தண்ணீரை விரும்பி, அச்சுதனை நினைக்க, அப்போது ஒரு புலையன் அங்கே தோன்றினான். அப்புலையன் உடலில் போதிய ஆடையில்லை. உடுத்தியிருந்த கந்தல் துணியும் அழுக்குப் படிந்து அவலட்சணமாய்க் காட்சியளித்தது. கூட ஒரு நாய்க் கூட்டம்; கையில் வேட்டைக்கு வேண்டிய வில்லும் அம்பும்; தோளில் கட்டித்தொங்கிய ஒரு தோற்பையில் ஜலம் நிரப்பி வைத்திருந்தான். உதங்கரைக் கண்ட புலையன், ‘வாரும் பிருகு குல சிரேஷ்டரே! தாகத்தால் வருந்தும் உம்மைப்பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. ஜலம் பெற்றுக் கொள்ளும்” என்று கூறியவாறே தன் தோற்பையிலிருந்த நீரை ஊற்றப் போனான். உதங்கர் மிகுந்த அருவருப்புடன் ‘வேண்டாம்’ என்று கூறி மனத்திலுள் கண்ணனை நிந்தித்தார். “இதுவா உன் வரம்?” என்று

கோபித்துக் கொண்டார். புலையன் பலமுறை நீரைப் பெற்றுக்கொள்ள வற்புறுத்தியும் உதங்கர் கேட்கவில்லை. புலையன் தன் நாய்களோடு அந்த இடத்திலேயே மறைந்தான்.

புலையன் மறைந்த அதிசயத்தைக் கண்ட உதங்கர் யோசிக்கலாஞர். "நான் என்ன செய்தேன் ? என் ஞானம் என்ன ஆயிற்று ? புலையன் கொடுத்த நீரை மறுத்தது பாவமல்லவா?" என்று வருந்திஞர். சிறிது நேரத்தில், சங்கும் சக்கரமும் ஏந்தி பகவான் அவர் முன் தோன்றிஞர்.

"புருஷோத்தமா! நீ இவ்வாறு புலையனுடைய தோற்பையிலிருந்து அசுத்த ஜலத்தை எனக்கு கொடுக்கச் செய்தது தர்மமா?" என்று நிந்தித்துக் கேட்டார்.

ஜஞர்தனன் புன்னகையுடன் சொன்ஞர்: "உதங்கரே! உமக்காக இந்திரனிடம் போய், ஜலரூபத்தில் அமிர்தம் கொடுக்கச் சொன்னேன். இந்திரன் முதலில் ஒப்புக்கொள்ளவில்லை. 'மனிதன் ஒருவனை தேவஞகச் செய்வது எனக்கு பிடிக்கவில்லை. வேறு ஏதேனும் வரம் தருவது நலம்' என்று பலமுறை இந்திரன் சொல்லியும், நான் மறுத்தேன். கடைசியில் இந்திரனும் ஒப்புக்கொண்டான். 'ஆஞல் சண்டாள வேஷம் தரித்துத்தான் போவேன். உதங்கர் பெற்றுக்கொள்ளாமல் அவமதித்தால் நான் ஜலம் கொடுக்க மாட்டேன்" என்று இந்திரன் என்னிடம் உரைத்துக் கிளம்பவே, நானும் உம்முடைய ஞானத்தை நம்பி, ஒப்புக்கொண்டேன். நீரோ சண்டாளவேஷத்தில் வந்த இந்திரனை வெறுத்து அவமதித்தது குற்றமல்லவா? அமிர்தத்தை மறுத்து விட்டீரே" என்று கண்ணன் கூறவே, உதங்கர் மனங்குறுகி, வெட்கத்தில் ஆழ்ந்தார்.

"மனிதன் குணத்தால்தான் வேறுபடுகிறுன் தவிர குலத்தால் அல்ல" என்பது, இந்தக் கதையின் மூலம் மகாபாரதம் நமக்கு உணர்த்தும் பாடமாகும்.

★

---

## திருப்பதியில் தங்குவசதி விவரங்கள்

| | அறைகளின் எண்ணிக்கை | வாடகை | நாள் ஒன்றுக்கு |
|---|---|---|---|
| I ஸ்ரீநிவாசா சத்திரம் (முதல் சத்திரம்) பேருந்து நிலையத்திற்கு அருகில். | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டுபடுக்கை வசதிகளைக் கொண்டது | 30 | ரூ. 12/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் நான்கு படுக்கை வசதிகளைக் கொண்டது. | 18 | ரூ. 15/– | ,, |
| (iii) மேஜை நாற்காலிகள் ஒருபடுக்கை வசதி கொண்டது. | 39 | ரூ. 10/– | ,, |
| II ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி | | | |
| மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது | 16 அறை தொகுதிகள் | ரூ. 16/– | ,, |
| III ஸ்ரீ பத்மாவதி விருந்திஞா விடுதி | | | |
| (i) மேஜை நாற்காலிகள் மற்றும் இரண்டு படுக்கை வசதிகளைக் கொண்டது. (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) | 10 அறைதொகுதிகள் | ரூ. 40/– | ,, |
| (ii) மேஜை நாற்காலிகள் மற்றும் ஒரு படுக்கை வசதி கொண்டது (குளிர்சாதனம் பொருத்தப் பட்டது) | 2 அறைதொகுதிகள் | ரூ. 30/– | ,, |

'ஆறங்கம்' என்றாலே வேதமும் அதன் ஆறு அங்கங்களுமேயாகும். வேதத்தின் முக்கிய பெருமை, வேதம் இறைவன் இயற்றியதே ஆகும். வேதம் இறைவனின் மூச்சுக் காற்று, வேதம் கடவுளின் ஸ்வரூபத்தை விளக்கிக் காட்டும் கருவி. ரிஷிகள் வேத மந்திரங்களைக் கண்டவர்கள், படைத்தவரல்லர். 'ऋषिर्दर्शनात्' 'ரிஷிர் தர்சனாத்' என்கிறார் யாஸ்கர். சங்கரரும் தமது சாரீரக பாஷ்யத்தில் 'வேதங்கள் என்றுமுள்ளவை' என்ற கொள்கையை நிலை நிறுத்தினார். "வேதங்களை ஒப்புக் கொள்ளாதவன் நாஸ்திகன்" என்று மனு சொல்கிறார். மனு ஸ்ம்ருதிக்கு உரை வகுத்த குல்லூக பட்டர் प्रलयकालेऽपि परमात्मनि वेदराशिः स्थितः (ப்ரளயகாலேபி பரமாத்மனி




வேதராசி: ஸ்தித:) என்கிறார். வேதத்தைப் ப்ரமாணமாகக் கொள்கிறவன் ஹிந்து, "प्रामाण्यबुद्धिर्वेदेषु" (ப்ரமாண்ய புத்திர் வேத தேஷு) என்று ஹிந்துவுக்கு இலக்கணம் கூறுகிறார் திலகர்.

"வேதாத்யயனம் செய்வது ஒரு பெரிய தவம். அத்தவத்தைக் கைக்கொள்ள வேண்டியது ஒவ்வொரு ப்ராமணனின் கடமையாகும்."

वेदमेव सदाभ्यसेत् तपस्तप्यन् द्विजोत्तमः ।
वेदाभ्यासो हि विप्रस्य तपः परमिहोच्यते ॥

"வேதமேவ ஸதாப்யஸேத் தபஸ்தப்யன் த்விஜோத்தம
வேதாப்யாஸோ ஹி விப்ரஸ்ய தபப்பரமி ஹோச்யதே"

என்றும்,

ब्राह्मणेन निष्कारणो धर्मः षडङ्गो
वेदोऽध्येयः ज्ञेयश्च

"ப்ராஹ்மணேன நிஷ்காரணோ தர்ம: ஷடங்கோ
வேதாத்யேய: ஞேயச்ச"

பலனைத் தேடாமல் ஆறு அங்கங்களுடன் கூடிய வேதம் ப்ராமணனால் அத்யயனம் செய்யப்பட வேண்டும் என்கிறார் மஹாபாஷ்யகாரர்.

சரி, வேதம் என்பது என்ன? இதை நாம் ப்ரமாணமாக கொள்வது ஏன்? தர்மத்திற்கு அடிப்படையான ப்ரமாணம் வேதம் தான். மனிதர்கள் விரும்ப வேண்டியவை சில, விலக்க வேண்டியவை சில. நன்மை களைப்பெறவும், தீமைகளை விலக்கவும் இவ்வுலகத்தினர் கூற இயலாத வழியை அறிவிக்கிறது வேதம்.

इष्टप्राप्त्यनिष्टपरिहारयोः अलौकिकं
उपायं यो ग्रन्थो वेदयति स वेदः ।

இஷ்டப்ராப்த்யனிஷ்ட பரிஹாரயோ அலௌகிகம்
உபாயம யோ க்ரந்தோ வேதயதி ஸ வேத: என்றும்,

प्रत्यक्षेण अनुमित्या वा यस्तूपायो न विद्यते ।
एनं विदन्ति वेदेन तस्मात् वेदस्य वेदता ॥

ப்ரத்யக்ஷேண அனுமித்யா வா யஸ்தூபாயோ ந வித்யதே
ஏனம் விதந்தி வேதேன தஸ்மாத் வேதஸ்ய வேததா

அதாவது ப்ரத்யக்ஷத்தாலும், ஊகத்தாலும் எக்காலத்திலும், எவராலும் அறிய முடியாத விஷயங்களை போதிக்கும் நூல் வேதமாகும். எனவே அலௌகிகமான தெய்வீக அறிவை அளிப்பது வேதம். இவ்வேதம் சர்வேஸ்வரனிடமிருந்து உபதேச பரம்பரையாக வந்திருக்கிறது.

வேதம் என்பது ஒரு பெரிய ஆலமரம். வேதம் நான்கு, இதன் அங்கங்கள் ஆறு. உபாங்கங்கள் நான்கு.

வேதத்தின் நான்கு பெருங்கிளைகள் :— ரிக் வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம், அதர்வண வேதம்.

நான்கு சிறு கிளைகள் :— ஆயுர் வேதம், தனுர் வேதம், காந்தர்வ வேதம், அர்த்த சாஸ்திரம்.

ஆறு இலைகள் :— சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம்.

நான்கு புஷ்பங்கள் :— புராணம். தர்மசாஸ்திரம், நியாயம், மீமாம்ஸை.

தியானமே புஷ்பம், பழமே முக்தி. வேதம் உலக நன்மைக்கு வழி காட்டுகிறது. ரோகம் அகலவோ, போகம் பெறவோ அல்லது யோகம் கற்கவோ வழி காட்டுவது வேதம்.

நாம் நல்ல ஜன்மாவைப் பெறவும், இப்பிறப்பில் நன்றாக வாழவும், பிறகு ஜன்மாவையே பெறாமல் பேரானந்தத்தை அடையவும் நம் மதத்தில் 3 சாதனங்கள் உள்ளன. அவை कर्म, भक्ति, ज्ञान (கர்மம், பக்தி, ஞானம்) யோகங்கள் என்று கூறுவர். இவற்றில் பக்தி ஞானங்களிரண்டும் மானஸிகமானவை. कर्म (கர்மா)வோ

திருமதி. சந்திரா ராமசந்திரன்,
சிதம்பரம்.

எனில் அந்தரிந்திரியங்களுடன் பாஹ்யேந்திரியங்களினால் வெளியில் உள்ள திரவியங்களைக் கொண்டு செய்ய வேண்டியவை. உதாரணமாக வேதத்தில் ஒரு கதை உண்டு. ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகள். ஒன்று பழத்தை சாப்பிட்டுக் கொண்டிருக்கிறது. மற்றொன்று உண்ணவில்லை. இதில் ஒரு தத்துவம் இருக்கிறது. மரம் என்பது நமது சரீரம். அதில் பரமாத்மா. ஜீவாத்மா என்ற இரண்டு

பக்ஷிகள் இருக்கின்றன. ஜீவாத்மாவிற்கு இந்திரியங்கள் சம்பந்தம் ஏற்பட்டு மாயையில் சிக்குகிறது. பரமாத்மா கர்மேந்திரிய ஞானேந்திரியங்களில் சிக்காமல் சுயம் பிரகாசமாக இருக்கிறது. இக்கர்மாக்கள் மூன்று வகை. அவை நித்யம், நைமித்திகம், காம்யம் என்பன. இக்கர்மாக்களைச் செய்தால் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், என்ற நாலுவித புருஷார்த்தங்களை அடையலாம். இக்கர்மாக்களின் ஸ்வரூபம், செய்யும் முறைகள் எல்லாம் வேதத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஆகவேதான் வேதமே தர்மத்திற்கு அடிப்படை என்று கூறப்பட்டது.

வேதத்தை அத்யயனம் செய்பவர் அதன் பொருளையும் அறிந்து செய்ய வேண்டும். அறியாதவர்கள் "சுமை தாங்கும் கம்பம் போல்" 'स्थाणुरयं भारहारः किलाभूत् अधीत्य वेदं न विजानाति योऽर्थं' என்கிருர் யாஸ்கர்.

இந்த வேத மந்திரங்களின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்வதற்கும், மந்திரங்களுடைய விநியோகம், ஸ்வரம் முதலியனவற்றை நன்ருக அறிந்து அனுஷ்டிப்பதற்கும் வேதாங்கங்கள் பயன்படுகின்றன.

## வேதாங்கங்கள்

மனிதனுக்கு எவ்வாறு தங்கள் அங்கங்கள் ஒவ்வொன்றும் இன்றியமையாதவையோ, அதுபோல்வேதங்களுக்கு அவைகளின் அங்கங்களான சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் முதலிய ஆறங்கங்களும் மிக இன்றியமையாததாகும்.

छन्दः पादौ तु वेदस्य हस्तौ कल्पोऽथ पठ्यते ।
ज्योतिषामयनं चक्षुः निरुक्तं श्रोत्रमुच्यते ॥
शिक्षा घ्राणं तु वेदस्य मुखं व्याकरणं स्मृतम् ।
तस्मात् साङ्गमधीत्यैव ब्रह्मलोके महीयते ॥

"சந்தபபாதெள து வேதஸ்ய ஹஸ்தெள
கல்போத பட்யதே
ஜ்யோதிஷாமயனம் சக்ஷுஃ நிருக்தம்
ச்ரோத்ரமுச்யதே
சிக்ஷா க்ராணம் து வேதஸ்ய முகம்
வ்யாகரணம் ஸ்ம்ருதம்
தஸ்மாத் ஸாங்கமதீத்யைவ ப்ரஹ்ம-
லோகே மஹீயதே"

சிக்ஷை :- எழுத்துக்களைப் பிழைபடாது உச்சரிக்க அவற்றின் பிறப்பிடம், மாத்திரை, அவை ஸந்தியில் கொள்ளும்மாறுபாடு, இவற்றைப்பற்றிய அறிவு வேண்டும். இந்த அறிவை கற்பிக்கும் சாஸ்திரம் 'சிக்ஷை' எனப்படும். இதை சற்று விரிவாகக் கூறும் நூல்கள் प्रातिशाख्यं "ப்ராதிசாக்யம்" என்ற பெயரால் அறியப்படும். சிக்ஷை ஆறு வகைப்படும்.

नारदीयशिक्षा நராதீய சிக்ஷா
पाणिनिशिक्षा பாணினி சிக்ஷா
भारद्वाजशिक्षा பாரத்வாஜ சிக்ஷா
व्यासशिक्षा வ்யாஸ சிக்ஷா
वासिष्ठशिक्षा வாஸிஷ்ட சிக்ஷா
याज्ञवल्क्यशिक्षा யாக்யவல்க்ய சிக்ஷா

பதபாடங்களையும், ஸம்ஹிதா பாடத்தையும் பிழையின்றி உச்சரிக்க சிக்ஷையின் அறிவு பயன்படும். வ்யாகரணம்:-வேதாங்கங்களிலேயே வ்யாகரண சாஸ்திரம் 'முகம் வ்யாகரணம் ஸ்ம்ருதம்' முகம் போல் கருதப்படுகிறது. மேலும் வேதத்திலேயே வ்யாகரணத்தை 'வேதானாம் வேதஃ' என்று போற்றப்படுகிறது. மேலும் ஆறு சாஸ்திரங்களான தர்க்கம், வேதாந்தம், மீமாம்சை, ஜ்யோதிஷம், வைத்யம் முதலியவைகளில் வ்யாகரணமும் ஒன்று.

வ்யாகரண சாஸ்திரம் படித்தவர்கள் புத்தியிற் சிறந்தவர்களாகவும், பண்டிதர்களாகவும், எல்லோராலும் மதிக்கப்படுகிருர்கள். எவ்வாறெனில் வால்மீகி இராமாயணத்தில் ஸ்ரீராமன் ஹனுமாரின் பேச்சுத் திறனை லக்ஷ்மணனிடம் போற்றுகிருர்.

नूनं व्याकरणं कृत्स्नं अनेन बहुधा श्रुतम् ।
बहु व्याहृतानेन न किञ्चित् अपशब्दितम् ॥

" நூனம் வ்யாகரணம் க்ருத்ஸ்னம்
அனேன பகுதாச்ருதம்
பஹுவ்யாஹரதானேன ந கிஞ்சித்
அபசப்திதம்"

ஹனுமாரின் பேச்சானது தங்கு தடையில்லாமலும், சரளமாகவும், அபசப்தம் சிறிது கூட இல்லாமலும் இருக்கிறது. வ்யாகரண சாஸ்திரம் படித்தவர்களால் மட்டுமே அவ்வாறு பேச முடியும்.

(32-ம் பக்கம் பார்க்க)

அண்மையில திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின தெப்போற்சவம் நடைபெற்றபோது.



# கரை சேர்க்கும் தோணி

சரணாகத ரக்ஷகனான ஸ்ரீமந் நாராயணனை சரண் அடைவது ஒன்றே ஜீவனின் குறிக்கோளாக இருக்க வேண்டும். பல வகையான புஷ்பங்கள் ப்ருதிவியில் மலர்கின்றன. அவை செடியில் இருந்தால் அழகு என்கிறோம். ஆனால் அதே புஷ்பம் பகவானின் திருவடியை அடைந்தவுடன் புனிதத் தன்மையினை அடைகின்றது. அந்த புஷ்பங்கள் செடியில் வாடிவிடின் மண்ணோடு மண்ணாக கலந்து ஒருவித பயன்இன்றி வீழ்ந்து விடுகிறது. ஆனால் இப்புஷ்பங்கள் பகவானின் திருவடியில் இருந்து அழகு செய்த பின் வாடிவிட்டாலும் பக்தர்களால் என்றென்றும் போற்றப் படுகின்றது. அதுபோலவே ஒவ்வொரு ஜீவனும் ஒவ்வொரு புஷ்பமாகும். அவை பகவானின் திருமலர்ப் பாதங்களை பற்றி அதனை என்றென்றும் நிரந்தரமாக பற்றிவிடின் நித்திய சூரிகளைப் போல் பிரகாசிக்கும் தன்மை உடைத்ததாக இருக்கும். ஜீவன் எவ்வகையில் பகவானின் திருவடியை அடைந்நாலும் ச்ரேயஸ் ஒன்றையே அடையும் என்பது வெகு நிச்சயம். ஆனால் அதே ஜீவன் பகவானிடத்து இருக்கும் பற்றினை விடுத்து மற்ற உலக விஷயங்களில் பற்று வைப்பின் ச்ரேயஸ்ஸை அடைந்து சம்சாரம் என்னும் சாகரத்தில் ஆழ்ந்து வெளியில் வரமுடியாமல் இகபர சுகங்களை இழந்து இந்த பிறவியையும் வீணே கழிக்கும்.

ஸம்ஸார சாகரத்தில் அவதியுறும் நம்போன்ற ஜீவன்களுக்கு தோணியாக அமைவது பகவானின் திருவடிகளேயாம்:

''ஸ்வயம் ஸமுத்தீர்ய ஸுதஸுதரம்
த்யுமந்
பவார்ணவம் பீமமதப்ரஸௌ-
ஹ்ருதா
பவத் பதாம்போருஹநாவமத்ர தே
நிதாய யாதா ஸநுக்ரஹோபவாந்''

என்று வேத வ்யாசர் ஸ்ரீ பாகவதத்தில் (பரமனே உன் பாதக் கமலங்கள் எனும் தோணியால் ஸம்ஸார ஸாகரத்தைக் கடந்து அத்தோணியை இங்கு வைத்துப் போனார்கள்) என கூறுகிறார்.

வாமனனை சரணடைந்து மூவ்வுலகமளந்த அவன் பாதம்பற்றி திரிபடாத நம்பிக்கையுடன் அவனை வணங்குபவர்க்கே அவன் பாதங்களின் பெருமை புரியும். பகவானின் பாதங்களுடன் அந்யோந்நிய சம்பந்தத்தை உடைபவர்கள் திருமகளும், பெரிய திருவடியும், சிறிய திருவடியும் நித்திய சூரிகளும், ஆழ்வார்களும், ஆசாரியர்களுமே ஆவர். இவர்களைக் காட்டிலும் நித்திய சம்பந்தம் பெற்று இடையறு சேவை புரியும் பகவானின் ஸ்ரீச்டாரியே உயர்ந்ததாகும். ஸ்ரீசடாரி பகவா

கொண்டது. இதன் பெருமையை உணர்த்த தேசிகர் இப்பாதுகையை ஸஹஸ்ர ஸ்லோகங்களால் அழகுப் படுத்தியுள்ளார். ஸ்ரீ சடாரியின் அவதாரமான நம்மாழ்வாரன்றோ நம்போன்ற பாமரர்களும் கரையை அடைய பகவானின் திருப்பாதத் தோணியாக நம்மிடம் உலவிவருகின்றார்.

திருமகளோடு ஒருகாலும் பிரியா நாதனுடைய திண்கழலிணைகளையே சேதுவாகப் பெற்ற தேசிகன் பகவத்தியாந் ஸோபானத்தில்,

''லக்ஷ்மீபூம்யோ: கரஸரஸிஜைர்லா-
லிதம் ரங்கபர்த்து:
பாதாம்போஜம் ப்ரதிபலதி மே
பாவநாதீர்க்கி காயாம்''

என்று அழகுபட கூறுகின்றார். பகவானின் ''திருக்கமலப் பாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே'' என்று பாணாழ்வார் தன் கண்கள் அவன் பாதத்தால் நிறைந்திருப்பதை உணர்ந்து ஜீவனை அத்தோணியில் அங்கேயே ஏற்றி கரைகளை வெகு சுலபமாகவே கடந்து ஸ்ரீரங்கனை அடைகின்றார்.

திருமதி. பா. வைஜயந்தி-சென்னை.

அநாதிகாலம் தொட்டு பகவானின் திருப்பொன்னடிகளைப் பற்றி ச்ரேயஸ்ஸைப் பெற்றோர் வரிசையில் ப்ரம்மா முதன்மையாக நிற்கிறார். துருவனும், பிரகலாதனும், பெரிய திருவடியும் ஸ்ரீமந் நாராயணனையே தன் பிதாவாகப்போற்றி ச்ரேஸ்ஸை பெற்ற மேன்மை எல்லோரும் ஸம்ஸயம் சிறிதுமின்றி உணர்வர்.

உரம் பெற்ற மலர்க்கமலத்தின் அடியால் கீழேழ் உலகமளந்து நின்று பின் மற்றுமோர் அடியால் மேலுல

களந்து, மாவலி தன் சிரசினையே மற்றுமோர் அடிக்குத் தர, அதன் மேன்மையை உணர்ந்த பகவானும் தன் பொற்கழலடிக்கு இடமளித்த மாவலிக்கு பாதாளலோகமும், சிரஞ்சீவிப் பட்டமும் கொடுத்து, தானே காவற்காரனுகவும் அன்றே நிற்கின்றுர் மாவலியின் அரசாட்சிக் கீழ்.

எந்த பாதுகையை ஒருமுறை வணங்கினுலும் உயர்வும் வணங்காதவர்களுக்கு தாழ்வும் உண்டாகுமோ, அந்த திவ்ய திருவடிகளை ரஷிக்கின்ற பாதுகைக்கு தன் அரசாட்சி மகுடத்தை நல்கவே தண்டகாருண்யத்திற்கு சென்றுரோ அந்த காகுத்தன்? வேதங்களே பகவானின் பாதங்களாக அலங்கரித்தமையால் தண்டகாருண்யத்தில் ரிஷிகளும் ராமனின் பொன்னடிப்பெற்ற வழியை வணங்கினரோ? தாமரையைச் சுற்றும் தேனீக்கள் போலவே கடல் கடந்தும் வந்தான் விபீடணன். பற்றியப் பாதங்கள் தேன் நிறைந்த கமலத்தோணியாதலால் ஸம்ஸார ஸாகரத்திலும் நன்மை தரும் தேனை உணவாகவும், சாகரத்தை கடந்த பின் நற்பதவியையும் அடைந்தான்.

சகாதேவன், சிவந்த பொற்கழலிணைகளை பக்தி எனும் கயிறுல் பிணைத்ததால் சிறையினின்று மீள முடியாத கண்ணன் அப்போதுதான் தன் பாதத்தின் பெருமையையுணர்ந்தான் போலும். அதனுல்தான் என்னவோ தன்னை மறந்தும்கூட

பீதகவாடை பிரானின் பாதத்தை மங்களாசாசனம் செய்து அனுபவித்த ஆழ்வார்களும் ஆசார்யர்களும் இராமனின் தோள் கண்டார் தோளே கண்டார் என்பது போல் அவன் இணையடித்தாமரையின் அழகில் மெய் மறந்தனர். தேவகியின் நற்குழந்தையாம் யசோதையினுல் நன்கு வளர்ந்து அனுபவிக்கப் பெற்றவனுமான பேதைக் கண்ணன் "பிடித்து சுவைத்துண்ணும் பாதக் கமலங்கள் காணீரே" என்றும் முத்தாலும் மணியாலும் வயிரத்தாலும் ஆணிப்பொன்னுலும் நன்குப் பெய்து தலைப் பெய்தாற்போல பத்து விரல்களும் மணிவண்ணன் பாதங்களில் ஒத்திருந்தவாறு இருந்ததையும் கண்ட பெரியாழ்வார் கண்ணனைத்தன் குழவியாகவே எண்ணினுர். கோதை நாச்சியாரும் அன்று அவ்வுலகளந்த அந்தப் பொன்னடிகளைப் போற்றி பின்னும் 'கன்று குணிலாவெறிந்தாய கழல் போற்றி' என்றும் மங்களாசாசனம் செய்து பரமனின் திருத்தோணியை அடைந்தாள்.

தெண்ணீர்ப்பொன்னி தன் திரைக் கைகளால் அடி வருடப் பள்ளி கொள்ளும் திருவரங்கன் "அடியிணைக் கீழ் அவர்களிட்டங்கடிவரோடென்று கொலே வணங்கும் நாளே" என்று துழாய் மார்பனின் இணையடி நிழலின் தன்மையில் அ...ுகும் நாளை எந்நாளோ என்று கை கூப்பிய திருக்கரங்களால் ஸ்வாகதம் கூறி அந்நாளை அழைக்கின்றுர். அன்று பாரவிந்த புண்டரீகனின் "பாத.புண்ணிய கீர்த்தி நுஞ்செவிமடுத்து உன். நம்முடைய வினைகள் பலவற்றையும் அறுத்து உய்யுங்கோள்' என்கிறுர் திருமழிசைபிரான். அதனுல் அவன் சுழலடியைஆர்வமோடிறைஞ்சி "நின் இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேனெம் மீசனே" என்று வைகுந்தனின் மீதுள்ள பற்றினைத் திண்ணென உறுதிப்படுத்துகின்றுர்.

இவ்வாறு ஆழ்வார்களாலும் "கயாது ஸீதவாய ஸத்விரத புங்கவத்ரௌபதி" என அபீதிஸ்தவத்தில் அரங்களிடம் எவ்வாறு பிரகலாதன் காகசரன் போன்றவர்கள் உன் திருவடி ஸம்பந்ததால் (பல விமுக்தம்) இவ்விருள் தருமா ஞானத்தின் விடுதலைப் பெற்றுர்களோ அவ்வாறே நாங்களும் பேறு பெற வேண்டும் என தேசிகரும் மற்ற ஆசாரியர்களும் பகவானின் பாத பெருமையை ஆய்ந்து துதித்து நிற்க "த்வத் பாத-போதே நமஹத்க்குரு தேரு குர்வந்தி கோவத்ஸபதம் பவாப்திம்" (உன்டைய பாதங்களெனும் ஓடத்தை றி ஸமுத்ரம் போல் பெரியதான ஸம்ஸாரத்தை சிரமமின்றித் தாண்டு ின்றனர்) என்று ஸ்ரீமத் பாகவதத்ில் ஸ்ரீவ்யாசரும் பணிந்தேத்த, ஆலிலை மேல் உறங்கும் கமலக் கண்ணனே, எல்லோரும் போற்றும் ன் பாதத்தின் சுவைதான் என் வோ என சுவைக்கின்றுன்போலும்.



---

"ஸப்தகிரி"யில் வெளியிட கவிதைகள், புகைப்படங்கள் பற் தூண்டும்படியான மற்றும் இது படியான கருத்துக்களை 'ஆசிரியர் அனுப்புங்கள்.

# கீதை காட்டும் நல்வழி

## பக்தி யோகம்

**அத்தியாயம்-12**

பகுதி — 10

பக்தனைப்பற்றிய விளக்கம் மேலும் தொடர்கிறது.

அனபேக்ஷ: சுசிர்தக்ஷ
உதாஸீநோ கதவ்யத: |
ஸர்வாரம்பபரித்யாகி
யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥16॥

'தேவைகள் இல்லாதவனும், தூயோனும், திறமையுடையவனும் ஓரம் சாராதவனும், துயரமற்றவனும், காமிய கர்மங்களைத் துறந்தவனும் என்னிடத்து பக்தி பண்ணுபவன் எனக்கு இனியவன் ஆகிறான்'.

எந்த ஒன்றைப் பெற்றால் அனைத்தையும் பெற்றதற்கு நிகராகிறதோ அந்த இறை அருளை அடையப் பெற்ற பக்தனுக்கு உலகத் தேவைகள் எதுவும் இல்லாது போய்விடுகின்றன.

பாகவதத்தில் கோபியர் கண்ணனிடம் எத்தகைய பக்தி கொண்டு விளங்கினர் என்பதைப் பற்றிய ஒரு அழகிய விளக்கம் வருகிறது: அன்பினால் என்னிடம் நிலைத்த மனத்தினராய் அவர்கள் உறவினரையோ தங்கள் உடலையோ, தூரத்திலோ சமீபத்திலோ உள்ள பொருள்களையோ உணரவில்லை. ஸமாதியிலாழ்ந்த முனிவர்களைப் போலும், ஸமுத்திரத்தில் பாய்ந்து நாம ரூபங்களை இழந்த நதிகளைப் போலும் இருந்தது அவர்கள் நிலை'.

இத்தகைய கோபியரின் உயர்ந்த பக்தியை நாராயணீயம் கீழ்க்கண்டவாறு புகழ்கிறது:

ஏவம் பக்தி: ஸகலபுவனே
நேக்ஷிதா ந ச்ருதா வா |
கிம் சாஸ்த்ரௌகை: கிமிஹ தபஸா
கோபிகாப்யோ நமோ஽ஸ்து ॥

'இத்தகைய பக்தி உலகெங்கும் காணப்பட்டதுமில்லை. கேட்கப் பட்டதுமில்லை. சாஸ்திரக் குவியல்களால் ஆவதென்ன? தவத்தால் ஆவதென்ன? கோபிகைகளுக்கு நமஸ்காரம்'

எனவே பக்தனுக்கு பகவானைத் தவிர வேறு எந்த லௌகிகத் தேவையும் கிடையாது. ஆனால் பகவானைப் பெற்றுவிட்ட பின் வேறு என்ன வேண்டும்? வேண்டுவார்க்கு வேண்டுவதை ஈந்தருளும் பெம்மான் அவன்.

மனத்தினில் ஆசைகள் இருந்தால் அது அசுத்தம் அடைகிறது. ஆசைகள் அறவே இல்லையெனில் மனம் தூய்மையின் உறைவிடமாகிறது. தேவைகள் எவருக்கு இல்லையோ அவரிடத்தில் ஆசைகள் இல்லையென்றாகிறது. ஆசை அற்ற மனமே மாசு அற்ற மனம். மாசு அற்ற மனமே மகேசன் உறையும் தலம். மனம் மொழி மெய் மூன்றிலும் மாசற்றிருப்பது தூய்மையாகும். பக்தன் அத்தகைய தூய்மையுடன் திகழ்கிறான். இதை ஆண்டாள் திருப்பாவையில்,

'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகு தருவான்
நின்றனவும்
தீயினில் தூசாகும்......'

என்று குறிப்பிடுகிறார்.

'எவனுடைய சிரவணமும் கீர்த்தனமும் புண்ணியமானதோ எவன் ஸாதுக்களுக்கு நண்பனோ அந்தக் கிருஷ்ணன் தனது கதையைக் கேட்பவர்களின் இதயத்தினுள்ளே இருந்து கொண்டு கெட்ட வாசனைகளைப் போக்கி விடுகிறான்' என்று பாகவதம் கூறுகிறது.



# கபிலேசர் பதிகம்

## திரு. இராம. சண்முகம் - வைரபுரம்

நீராய் வெளியாய் நிலனொடு காற்றாய்
சேரார் அனலாய்த் திகழும் பரனே!
ஆரா அமுதே! அடியேன் இடரைத்
தீராய் திருமலை அடிவாழ்பவனே!

பாதலம் கபிலன் பகர்மனை நீங்கிப்
பூதலம் வந்திடும் புண்ணிய மூர்த்தி!
சீதரன் வாழும் திருமலை அடியில்
ஆதர வானாய் அரும்புவி யோர்க்கே.

நின்னுடை வலப்பால் பலியார்ந்துண்ணும்
பன்னரும் இடப்பால் பகரறம் வளர்க்கும்
தன்னிகர் இல்லறம் துறவறம் இரண்டும்
நின்புடை இருக்கக் கண்டனம் மாதோ

புனல்செஞ் சடையா! புனிதா! முனிவிடு
கனல்கொள் சிவனே! கயிலைக் கிறைவா!
அனல்கொள் வடிவா னவனே! அடியேன்
உனைசேர் வழியை உரையாய் அரனே!

உய்யாப் பொறியால் உழல்வுறு மனதே!
மையார் கண்டன் மலரடி தொழுவாம்
பொய்யார் உலகின் பொருள்மேல் திரியேல்
ஐயோ! அழிவாய்! அழிவாய்! வீணே.

எந்தாய்! அடியேன் ஏர்கொள் கபிலச்
சிந்தாமணி! உன் திருவடி நாளும்
கொந்தார் கொன்றை மலர்கொடு தொழுவேன்
வந்தாண்டருள்வாய் வளர்செஞ் சுடரே

திரிபுரம் அழிக்கச் செல்வுழி நின்கை
வருசிலைக் கல்லாம் வார்நாண் நஞ்சிடும்
மருவிய பாணமும் மண்ணுண்டதுவே
வெருவிடப் பகைவரை வீழ்த்தினை யன்றோ.

இந்திரன் முதலா எழிலரும் வானோர்
வந்தடி பணிய வரமது தருவாய்
சிந்தனை செய்வோர் தீவினை போக்கும்
கந்தர சுந்தரக் கபிலே சுரனே!

திருமா லயனும் தேடிக் காணா
உருவா னவனே! உமையாள் கணவா!
அருவாய் உருவாய் இலகிடும் அரனே!
மருவார் கொன்றை மலரணி வோனே!

என்னுடை உயிராம் எழிலார் தோணி
நின்னுடை அருளே மீகானாகப்
பன்னரு ஞானக் கடல்மிசை மேவி
உன்னத முத்தியை உறவருள்வாயே.

மனத்தினில் ஆசையற்றுத் தூய்மையுடன் விளங்குபவனிடம் திறமை தானே வந்து வாய்க்கிறது. கடவுள் நாட்டம் கொண்ட பக்தர்கள் என்றால் உலகக் காரியங்களில் திறமை குன்றியவர்கள் என்று சிலர் தவறாக எண்ணுகின்றனர். மாறாக, அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் திறமைக்கு எடுத்துக் காட்டாக அமைகிறது. 'யோக: கர்மஸு கௌசலம்' செயலில் திறமையே யோகம் என்பதற்கேற்ப செயல் திறமை மிக்கவர்களாக பக்தர்கள் விளங்குவார்கள். 'தக்ஷ:' என்ற சொல் திறமை, சுறுசுறுப்பு போன்ற பல குணங்களைக் குறிக்கிறது. கூர்மையான கத்தி முனை போல பக்தனின் அறிவு சதா தீக்ஷ்ணமாக இருக்கும். எது எதை எப்படி எப்படிச் செய்யவேண்டுமோ அது அதை மிகத் திறமையுடன் பக்தன் செய்து முடிப்பான்.

பக்தன் ஓரம் சாரமாட்டான். தன்னிடம் இருக்கும் செயலாற்றும் திறமையை தனக்கு வேண்டியவர்களுக்கு ஒரு விதமாகவும், மற்றவர்களுக்கு வேறு விதமாகவும் காட்டமாட்டான். முதலில் அவனுக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்பதே கிடையாது. சூரியனைப் போல, சந்திரனைப் போல தன் திறமையை அனைவருக்கும் சமமாக அவன் வழங்குவான். சமன் செய்து சீர் தூக்கும் கோல் போல் முறை தவறாது நெறி பிறழாது அவன் எல்லார்க்கும் பொதுவாக நடந்து கொள்வதனால் உதாஸீனன் என்று அழைக்கப்படுகிறான்.

நேர்மையாக நடந்து கொள்பவனுக்கு மனக்கிலேசம் உண்டாகாது. பொய் சொல்பவர்களுக்கு, முறை தவறி நடப்பவர்களுக்கு, ஓரம் சார்பவர்களுக்கு, மனச் சாட்சிக்கு மாறாக நடப்பவர்களுக்கு............ இத்தகையவர்களுக்குத்தான் மனம் அமைதியற்றுத் தவித்துக் கொண்டிருக்கும்.

(28-ம் பக்கம் பார்க்க)



# தூமணி



'தூயோமாய்' என்ற பதம் பரிசுத்தமான தேகத்தையுடையவனாய் என்பது பொருள் கொண்டால் நிலையில்லா ஒரு பொருளைக் குறிக்கும். ஆனால் 'தூமணி' பரிசுத்தமான மணி என்ற எப்போதும் இருக்கும் ஒரு வஸ்து. இதை எப்போது நிலையில்லாமலும் அசுத்தமென்றும் சொல்லலாம் எனில், பகவானுடைய கைங்கர்யத்தைத் தவிர வேறு இடங்களில் உபயோகிக்கும்போது. இப்படி 'தூயோமாய்' 'தூமணி' என்பதை அடிக்கடி சூடிக்கொடுத்த நாச்சியார் அல்லது ஆண்டாள் திருப்பாவையில் காணலாம். உதாரணமாக ;—

தூயபெருநீர் (5) தூமலர் (14) தூசாகும் (16) தூயனவேந்தி (திருவிருத்தம் 21), திருமணி (திருவாய்மொழி (3-5-10) தூமணி (4-6-11) காணலாம்.

பகவானுக்கு திருவாராதனம் செய்யுங் காலங்களில் இதர உபகரணங்களுடன் திருமணி சேவிக்கிறோம். இதை எப்போது என்று சற்றே யோசித்தால், பகவானை அபிகமன ஆராதனம்போது எழுப்பவும், தளிகை சமர்ப்பிக்கும்போதும், பிறகு கற்பூர ஹாரத்தியுடனும் உபயோகிக்கின்றோம். ஆதலால் பகவானுடைய கைங்கர்யத்தில் உபயோகிக்கும் பொருளாக தூமணியாகிறது. ஆண்டாள் தூமணி மாடத்து என்னும்போது அந்த மாளிகையில் பகவானுக்காகவும் அல்லது பக்தர்களுக்காகவும் உபயோகிக்கின்ற பரிசுத்தமணியென்றே கொள்ளலாம்.

இதில் ஒன்று சந்தேகம் எழலாம். நம் இல்லங்களில் ஸாலக்ராமம் அல்லது ஒரு சிறு விக்ரகம் (பொன், அல்லது வெள்ளி அல்லது தாமிரம் அல்லது ஏதோ ஒரு உலோகத்தாலானது) உபயோகிக்க அது எப்படி இந்த மணியானது அதில் பரிசுத்தமடைகிறது என்பதே. இதற்கு நம்மாழ்வார் திருவாய் மொழியில் பதிலளிக்கிறார். அதில்,

தஞ்சமாகிய தந்தைதாயொடு தானு
மாயவையல்லனு
யெஞ்ச விலமரர்க்கு லமுதல் மூவர்த
முள்ளு மாதியை
யஞ்சி நீருல கத்துள் ளீர்க ளவனி
வனென்று கூழேன்மின்
நெஞ்சி னுளிவைப் பான்ய வனவனு
'கும் நீள்கடல் வண்ணனே

ஒரு விக்ரஹத்தைச் செய்து அதில் எம்பெருமானை பிரதிஷ்டை செய்தால் அதிலும் வந்திருப்பான் என்று சொல்கிறார். ஆழ்வார்கள் எம்பெருமானை நேரில் கண்டு அனுபவித்தவர்கள். அவர்கள் சொல்லும் ஒவ்வொரு விஷயமும் மெய்யே. கோவில்களில் சம்ரோக்ஷணம் செய்த பிறகே அதற்கு ஸாந்நித்யம் வருவதும் இதனாலன்றோ ?

மணிக்கு எப்படி 'தூமணி' என்று வருகிறதோ அதே போல் மலரிலும் 'தூமலர்கள்' உண்டு. இவைகள் யாது? இதற்கும் பதில் 'திருமொழியில்' காணலாம். 'பூச்சூட்டல்' என்ற பகுதியில் ஆழ்வார் (2-ம் பத்து 7-ம் திருமொழி) செண்பகப்பூ, மல்லிகை, பாதிரி, செங்கழுநீர், புன்னை, குருக்கத்தி, இருவாட்சி, கருமுகை இவைகளைப்பற்றிச் சொல்கிறார். ஆனால் பகவான் தனக்கு உகந்தது எது என்பதை சொல்லுகையில், பாகவதர்கள் பூ பரிக்கும்போது அவர்கள் விரல்களில் முள்குத்தி ரத்தம் வருபடி செய்யாமலிருக்கும் பூ வெல்லாம் தனக்குகந்தது என்கிறார். அவர் கருணைக்கடல் என்பதை இதைவிட அழகாக எப்படி உணரமுடியும் ?

இங்கு ஒரு சந்தேகமெழும். திருமொழி 2-8ம் பாட்டில்

"உள்ளமுரை செய லுள்ளவிம்
மூன்றையு
மூள்ளிக் கெடுத்திறை யுள்ளிலொ
டுங்கே"

என்பதில் மனது, வாக்கு, உடம்பு ஆகிய கரணங்கள் இருக்கும்போது வேறு உபகரணங்கள் அவன் வேலைக்காக வேண்டா' மென்கிறாரே என்பதே. இதில் ஒரு கஷ்டம். நமது இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி அவனை தியானம் செய்வதென்பது கடினம், ஆதலால்தான் அர்ச்சா மூர்த்தி மூலமாக ஆராதனம் செய்து வழிபடுதல்.

தூமணியென்பதற்குப் பதில் ஒரு இடத்தில் 'திருமணி வண்ணனை' (3-5-10 திருவாய்மொழி) யென்று வருகிறது. இங்கு 'அழகான நீலரத்னம் போன்ற நீலவர்ணமுள்ளவன்' என்று கொள்ள வேண்டும். சேவிக்கும் திருமணி வேறு: அப்படியென்றால் 'பொல்லாமணி' அல்லது கெடுதல் மணி எது வென்று கேள்வி எழும். திருவாய் மொழி பாட்டில்,

போனாய் மாமரு தின்னடுவே யென்
பொல்லாமணியே
தேனே யின்னமு தேயென்றன் ......
......... னுள்ளனவே

என்னும்போது 'பொல்லாமணி' துளையிடப்படாத மணியைக் குறிக்கும். அதில் என்ன உயர்த்தி? துளையிடப்படாமலிருக்கும் மணிக்கு தேஜஸ் அதிகம். முத்து கடலிலிருந்து அகப்படும் போது துளை கிடையாது. பகவானுக்கும் எப்போதும் குறைவிலா தேஜஸ் உண்டு.

ஆ. சேஷாத்ரி, பி.ஈ.,-சென்னை.

நம் வாழ்க்கையில் கோவில்களில் மணி அடித்தால் பகவான் அமுது செய்கிறார், பூஜை நடக்கிறது என அறியலாம். அதேபோல் மாதா கோயில்களில் மணியடிக்கும்போது பிரார்த்தனைக் கூட்டம் நடக்கிறதென அறிகிறோம். இவையெல்லாம் தூமணிகள். தெருவில் வெகு வேகமாக மணியடித்துக் செல்கிறது ஒரு மோட்டார் வண்டி. அது எதைக் குறிக்கிறது என்பதை நாம் சுலபமாக அறிகிறோம். அது ஒரு ஆபத்துக்காக உதவ செல்கிறது. சில வண்டிகளில் மணிகட்டி சப்தம் கேட்கிறோம். அவை ஏதோ வியாபாரமணி. இதையே பசுவின் கழுத்தில் கட்டினால் அன்று பொங்கலென்று அறிகிறோம்.

ஒரு சுவாரஸ்யமான சம்பவம்: ஸ்ரீ கிருஷ்ணன் வெண்ணைத் திருடிச் சாப்பிடு மிடத்தில். கோகுலத்தில் யசோதை கிருஷ்ணனை அழகாக அலங்காரம் செய்கிறாள். எப்படி? காலினில் சலங்கைக் கொஞ்ச, கையினில் வளை குலுங்க, கழுத்தில் மணிகளால் ஆன மாலை (அதாவது சப்திக்கின்ற சிறிய மணிகள் வரிசையாக கோத்த மாலை) தலையிலும் அதே மாதிரி மாலை, அரைஞாண் கட்டுமிடத்திலும் அதேமாதிரி. இரண்டு முழங்கைகளின் மேலும், தோளின் கீழும் அதே மாதிரி அணிவித்து மற்ற பிள்ளைகளுடன் விளையாட அனுப்புகிறாள். இவனோ கரிய திருமேனியுடையவன். இருட்டில் இவன் உண்ணும் வெண்ணையின் நிறமும், பல் வெண்மை நிறமல்லாது வேறு இவனை இருட்டில் கண்டு பிடிக்க முடியாது. கிருஷ்ணன் தனியாக ஒரு வீட்டின் இருட்டறைக்குள் போய்விடுகிறான் அங்கு வெண்ணையிருக்குமிடம் அவனறியாதது ஒன்றுமில்லை. மற்ற பிள்ளைகளும் ஒவ்வொரு இடங்களுக்குச் சென்று விடுகின்றனர். இவன் தனியாக வெண்ணை அமுது செய்ய, கட்டியிருந்த மணிகளெல்லாம் சப்திக்கின்றன. கிருஷ்ணன் அவைகளைத் தன்னைக்காட்டிக் கொடுத்துவிட வேண்டாமென்று வேண்டுகிறான். ஆனால் அவைகள் சொல்லும் அற்புதமான பதிலென்ன? நீர் அமுது செய்யும்போது நாங்கள் ஒலிக்காமலிருந்தால் நாங்கள் எடுத்த ஜன்மத்தின் பயன் என்னவாகுமென்கின்றன! அந்த மணிகள் தாம் "தூமணிகள்"

கடைசியாக, தூப்புல் தேசிகன் அவதாரம் நாமெல்லாரும் அறிந்த விஷயம். திருமலையில் கோவிந்தனுக்கு ஒலித்துக்கொண்டிருந்த மணி, நம் தூப்புல் ஆசார்யனாக அவதாரம் செய்து விசிஷ்டாத்வைதத்துக்கு செய்துள்ள அரிய சேவையும், அதனால் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரென்றும், கவிதார்க்கிக சிம்ஹமென்பதும் பகவானாலேயே பெயரிடப் பட்டதும் வைஷ்ணவ பெரியோர் அறிந்ததே. இதனாலும் மணிக்கு தூமணியெனவும் விளக்கலாம்.

*

# வைணவ வினா - விடை

வித்வான் தஞ்சை ஸ்ரீ. உ. வே. என். எஸ். தாதாசார்யார்.

**துவைதம் என்றால் என்ன?**

பிரம்மம் வேறு, ஜீவன் வேறு என்றும், சேதனா சேதனங்கள் வேறு என்றும் இரண்டு பிரிவினையை ஒப்புக்கொண்ட ஒரு மதமாகும்.

**விசிஷ்டாத்துவைதம என்றால் என்ன?**

இரண்டாயிருக்கும் தன்மை ''த்விதா'' எனப்படும். அதாவது பேதம். பேதம் என்றால் பிரிவு எனப் பொருள். அப்பிரிவு இல்லாதது அத்துவைதமாகும். ஆக அத்துவைதம் என்றால் இரண்டல்ல. ஆனால் ஒன்றாகவே இருப்பது எனப்பொருள். விசிஷ்டம் என்றால் சேர்ந்தது எனப்பொருள். ஆகவே சித்-அசித் என்ற தத்துவங்களுடன் கூடிய ஈசுவரன் என்ற தத்துவம் ஒன்றுதான் எனப்பொருள். அதாவது இறைவனுக்கு சித் என்ற ஜீவான்மாவும், அசித் என்ற ஜடப்பொருளான ஊன் உடலும், உடல்போல் அமைய, இறைவன் இந்த உடலில் புகுந்து உயிர்போல் இருக்கிறார் என்பதாகும். ''உடன் மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளன்'' என்ற ஆழ்வார் திருவாக்கு இக் கருத்திற்கு ஆதாரமாகும். (காண்கின்ற உலகம், ஜீவன் யாவும் உண்மையே) இதனைச் சரீர-சரீரி பாவம் என்பார்கள். இக்கருத்து இம்மதத்தின் தனிச்சிறப்பாகும். இதை ''ப்ரதான ப்ரதி தந்த்ரம்'' என்பார்கள். இம்மதத்தை-கடக சித்தாந்தம், சர்வானுகூல சித்தாந்தம், ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தம் எனவும் அழைப்பார்கள்.

**ஸ்ரீவைணவர்களைப் பரமைகாந்திகள் என ஏன் அழைக்கிறார்கள்?**

ஏகாந்திகள் என்றால் ஒன்றையே விரும்புகிறவர்கள் எனப்பொருள். அதாவது மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள் எனப் பொருளாகும். அம் மோக்ஷத்தையும் ஸ்ரீமந் நாராயணனையே வழிபட்டு அவனிடமிருந்தே அடைய விரும்புகிறார்களாதலால் முதற்பதமாக ''பரம'' என்ற சொல் சேர்ந்தது. ஆகவே பரம+ஏகாந்திகள் என்ற இரு சொற்கள் சேரவே ''பரமை காந்திகள்'' என இவர்களை அழைக்கிறார்கள். மோக்ஷம் என்ற பேரின்ப வீட்டை அருள நாராயணன் ஒருவரால்தான் இயலும் என்பதும் இவர்கள் கொள்கை.

**உபய வேதாந்திகள் என்றால் என்ன?**

ஸ்ரீ வைணவர்களின் திருப்பெயர்களுக்கு முன்பு ஸ்ரீ-உ-வே. என்ற எழுத்துக்களை சேர்த்து வழங்கி வருவதைக் காண்கிறோம். ஸ்ரீ என்றால் திருமாலுக்கு அடிமை செய்யும் அழகு. அத்தகைய அழகைப் படைத்தவர்கள் என்பது ஸ்ரீ என்ற சொல்லின் பொருள். உபயவேதாந்தி என்றால், தமிழ் மறையாகக் கருதப்படும் திருவாய் மொழி முதலிய திவ்வியப் பிரபந்த நூல்களையும், வடமொழி வேதாந்த நூல்களையும், ஆக இரண்டையுமே சமயப் பெருநூல்களாகக் கொண்டவர்கள் எனப்பொருள். உபய என்றால் இருவகைப்பட்ட என்பது பொருள். இரட்டை எனப் பொருள்

**இவர்கள் மதத்தின் கோட்பாடுகள் எவை?**

1. தத்துவம் (உண்மை, ஹிதம். (வழி) புருஷார்த்தம். (அடைய நிற்கும் பயன்)
2. சித் (ஜீவான்மா), அசித் (ஜடமான உடல்), ஈசுவரன் (எல்லையற்ற குற்றமற்ற குணநலமும், வடிவழகும் கொண்ட ஸ்ரீமந் நாராயணன்)
3. திருமந்திரம், (திரு எட்டெழுத்து மந்திரமாகிய நாராயணா என்னும் திருப்பெயர்) துவயம். (ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே-ஸ்ரீமதே நாராயணாய நம:) சரம சுலோகம். (கீதையில் 18-வது அத்தியாயத்தில் 66-தாக வரும் ''ஸர்வதர்மான் பரித்யஜ்ய'' என்ற (ஜபிக்கும்) செய்யுள் இதனை மெய்மைப் பொருள்கள் என்பார்கள் — இவைகளை முறையே நாலிரண்டு (8) ஐயைந்து (25) நாலெட்டு (32) எனவும் கூறுவர்.

**தத்துவம் என்றால் என்ன?**

உலக இயற்கையின் தன்மையைக் கடந்த வைகுண்டம் என்ற சுத்த சத்துவலோகத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ, பூமி, நீளாதேவிகளுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணன்.

**ஹிதம் என்றால் என்ன?**

சரணாகதி—(முடிவாகத் திருமாலையே ஹிதம் அதாவது மோக்ஷம் பெற ஏது என்பார்கள்.)

**புருஷார்த்தம் என்றால் என்ன?**

ஸ்ரீமந் நாராயணனுக்குக் கைங்கரியம் செய்து மகிழ்தல் அடியார்களின் பணியும் இதில் அடங்கும் இவர்கள் பக்தர்கள்—பாகவதர்கள் என இரு வகை.

**திருமாலுக்கு ஆறு குணங்கள் என்ன?**

1 ஞானம், 2. சக்தி, 3. பலம், 4. ஐச்வரியம், 5. வீரியம், 6. தேஜஸ் என்பன.

**திருமாலின் தேவிமார்கள் எவர்?**

திருமகள் என்ற பெரிய பிராட்டியார், மண்மகள் என்ற பூமாதேவி, ஆயர் மகள் என்ற நீளா தேவி என்பவர்கள்.

**தேவிமார்களின் மூவரின் தன்மை என்ன?**

1. திருமகள்—ஞானப்பால் ஊட்டி வளர்க்கும் தாய் யாருக்கும் தன்னை தர அறவே அறியாத எல்லா உலகின் தாய். இவளுக்கு ஸ்ரீ:-பெரிய பிராட்டியார் என்ற திருப்பெயர்கள்.
2. பூமாதேவி—குற்றம் கண்டவிடத்து ஸ்ரீமந்நாராயணனிடம் பொறுத்தருளச் செய்பவள். வராகாவதாரத்தில் தனித்துப் பெருமாளின் தந்தத்தில் இருந்தவள். இவளுக்கு க்ஷமா, தரித்ரீ எனப் பெயர்கள்.
3. நீளாதேவி—தனது போக மயக்குகளால் நம் குற்றங்கள் எம்பெருமான் கண்ணில் படாமலே செய்பவர்கள். தமிழில் நப்பின்னை என்பர்.



# ஒப்பிலியப்

திரு. என். ராம

தஞ்சை மாவட்டத்தில் ஒப்பிலியப்பன் கோவில் ஒரு சிறந்த பிரார்த்தனைத் தலமாகும். இத்தலம் திருநாகேசுவரம் புகைவண்டி நிலையத்திலிருந்து ஒரு மைல் தூரத்திலும் கும்பகோணத்திலிருந்து 3 மைல் தொலைவிலும் உள்ளது. கும்பகோணத்திலிருந்து இத்தலத்திற்கு அடிக்கடி பஸ்கள் செல்கின்றன.

பழைய புராணங்களில் இத்தலம் ஆகாச நகரம், வைகுண்ட நகரம், திரு விண்ணகர், ஒப்பிலியப்பன் ஸந்நிதி, உப்பிலியப்பன் சந்நிதி முதலிய பெயர்களால் வழங்குகின்றது.

இத்தலத்து பெருமாளுக்கு திருவிண்ணகரப்பன் தன்னொப்பாரில்லப்பன், ஒப்பிலியப்பன், உப்பிலியப்பன், ஸ்ரீ நிவாஸன், ஸ்ரீ வெங்கடாசலபதி என்ற திரு நாமங்கள் வழங்குகின்றன.

இங்குள்ள பிராட்டிக்கு பூமி தேவி, பூதேவி, பூமி நாச்சியார், தரணீதேவி, வஸுந்தரை என்று பல பெயர்கள் வழங்கப்படுகின்றன.

பெருமாள் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். நாச்சியார் வடக்கு நோக்கி அமர்ந்துள்ளார். மார்க்கண்டேயர் தெற்கு நோக்கி உள்ளார்.

இப்பெருமான் நம்மாழ்வாருக்கு ஐந்து வடிவங்களுடன் காட்சி அளித்ததாக புராணம் கூறும். அவையாவன: பொன்னப்பன், மணியப்பன், முத்தப்பன், என்னப்பன், திரு விண்ணகரப்பன். இவர்களை நம்மாழ்வார் பாடியுள்ளார்.

இத்தலத்தையும் பெருமாளையும் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கை ஆழ்வார், பேயாழ்வார் என்ற நால்வரும் பாடியுள்ளார்கள்.

கருடன், காவேரி, தர்ம தேவதை, மார்க்கண்டேயர் ஆகிய நால்வரும் இங்குள்ள பெருமாளை பிரத்யக்ஷமாக கண்டதாக புராணம் கூறும்.

இங்குள்ள விமானத்தின் பெயர் சுத்தானந்தம். இதை ஸேவிப்பவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும் என்பது நம்பிக்கை.

இத்தலம் மார்க்கண்டேய க்ஷேத்திரம் என்று வழங்கப்படுகின்றது. துளஸிவனம் என்றும் கூறுவர். திருத்துழாய்க் காட்டில் பூமிதேவி அவதரித்ததால் இப்பெயர் ஏற்பட்டது.

உற்சவர்



இங்குள்ள புஷ்கரணியின் பெயர் அஹோராத்ர புஷ்கரணி. இங்கு இரவு பகல் எந்நேரமும் நீராடலாம். ஆலயத்திற்கு வெளியேயுள்ள தீர்த்தங்களின் பெயர்கள்: சூர்யதீர்த்தம், இந்திர தீர்த்தம், பிரம்ம தீர்த்தம் மற்றும் சார்ங்க தீர்த்தம். ஆலயத்திற்கு தெற்கே தக்ஷிண கங்கை, தக்ஷிண யமுனை, தக்ஷிண கோதாவரி என்று மூன்று புண்ணிய நதிகள் ஓடுகின்றன.

எம்பெருமான் பங்குனி மாதம் ஏகாதசி கூடிய திருவோண நக்ஷத்திரத்தில் பகல் 12 மணிக்கு இத்தலத்தில் அவதரித்தான். இந்த அவதார தினத்தில் திருத்தேருடன் ஒன்பது நாள் பிரம்மோஸ்தவம் நடைபெறும்.



வர்

# ன் கோவில்

நவ்ஷ்ணு - மாயூரம்.

பெறுகின்றன. அவ்வப்போது பக்தர்கள் பிரார்த்தனை உற்சவங்கள் நடத்துகின்றனர்.

பல அழகான கட்டிடங்கள் உள்ளன. சலவைக் கல் கருங்கல் மண்டபங்கள் உள்ளன. மிகவும் அழகான கல்யாண மண்டபம் சமீபத்தில் கட்டப்பட்டுள்ளது. கோடி அர்ச்சனை நினைவுச் சின்னமாக அமைந்துள்ளது. திருநந்தவனமும் உளது.

லவணம் (உப்பு) இல்லாமலே பகவானுக்கு சகல நிவேதனங்களும் செய்யப்படுகின்றன. "உப்பையோ அல்லது உப்பு கலந்த பொருளையோ கருடன் சந்நிதிக்கு அப்புறம் ஒருவரும் கொண்டு செல்லக் கூடாது. இது பெரிய அபசாரமாகக் கருதப்படுகின்றது. கருடன் சந்நிதியில் மிளகு கலந்த லவணத்தைச் சேர்ப்பது ஒருபுராதன பழக்கம். அவ்வாறு செய்தால் சரும நோய்கள் அணுகா என்பது நம்பிக்கை.



சுத்தானந்தம் - விமானம்

எம்பெருமான் பூமிப்பிராட்டியை ஐப்பசி மாதம் திருவோணத்தன்று மணந்து கொண்டான். அப்போது திருக்கல்யாண உற்சவம் 13 நாள் நடைபெறும்.

இந்தத் தலத்தில் தாயாருக்குத் தனிச் சந்நிதி கிடையாது. பெருமாளுக்குப் பக்கத்தில் பூமி நாச்சியார் மட்டுமே உண்டு. ஸ்ரீ தேசிகன் சந்நிதி கர்பக்கிரகத்திற்கு வெளியே அமைந்துள்ளது. ஆழ்வார்கள் சந்நிதியும், கண்ணன் சந்நிதியும், ஸ்ரீ ராமன் சந்நிதியும் உள்ளன. மற்றும் பல சந்நிதிகள் உள்ளன.

இந்த சந்நிதி வடகலை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ரதாயத்தைச் சேர்ந்தது. ஸ்ரீ வைகாநஸ ஆகம முறைப்படி பூஜைகளும், உற்சவங்களும் நடை

## புராண வரலாறு

பிரம்மாண்ட புராணத்தில் இந்த வரலாறு கூறப்பட்டுள்ளது. மார்க்கண்டேய முனிவர் இங்கிருந்த துளசி வனத்தில் தவம் செய்து வந்தார். ஒரு நாள் ஒரு பெண் குழந்தை இந்த வனத்தில் துளசிச்செடியின் பக்கவில் வீழ்ந்து கிடப்பதைக் கண்டார். அக் குழந்தையை எடுத்து பூமிதேவி என்ற பெயரிட்டு வளர்த்து வந்தார். அவள் வயதடைந்த உடன் திருமணம் முடிக்க எண்ணினார். அப்போது ஒரு கிழவன் கோல் ஊன்றி வந்து அப்பெண்ணைக் கேட்டார். கிழவனுக்குப் பெண் கொடுக்க விரும்பாத முனிவர் தன் பெண்ணுக்கு எந்த விதமான வேலையும்,சமையலும் கூட அருசுவையுடன் உப்பிட்டு சமைக்கத் தெரியாதே என்று சாக்கிட்டுச் சொன்னார். கிழவர் எது சொல்லியும் இணங்காத முனிவரின் நிலை கண்டு தனது உண்மையான உருவத்தை ஸ்ரீ நாராயணனாக சங்கு சக்கரத்துடன் காட்சி அளித்தார். முனிவருக்கு மகிழ்ச்சி ஏற்பட்டு தன் பெண்ணைக் கொடுக்க இசைந்தார். பெருமாளும் தான் இனி இங்கு உப்பிட்டு உண்பதில்லை என்று முனிவருக்கு வாக்குக் கொடுத்து, பூமிதேவியை மணந்தார். மூல ஸ்தானத்தில் பெருமாள், பூமிதேவி, மார்க்கண்டேய முனிவர் மூவரும் காட்சி கொடுக்கின்றனர். முனிவர் மூன்று வரங்கள் கேட்டார். "என் புதல்வியாகிய பூமிதேவியை நீர் மணந்து இந்த தலத்திலேயே எந்நாளும் உறைதல் வேண்டும். இத்தலம் என் பெயரால் வழங்க வேண்டும். லவண சம்பந்த மில்லாமல் நீர் அமுது செய்யும் உணவு உமது அடியார்களுக்குச் சுவையுள்ளதாக இருக்க வேண்டும். கடைசியில் எனக்கு மோக்ஷத்தையும் அருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். பகவான் அருளினார். திருவிண்ணகரம், மார்க்கண்டேய க்ஷேத்திரம் முதலிய பெயர்கள் இத்தலத்திற்கு ஏற்பட்டன.

தேவஸ்தானத்தார் ஓர் ஸ்தல புராணம் வெளியிட்டுள்ளார்கள். அதை ஆதாரமாகக் கொண்டு இக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

*

# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்,
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

இலை, பூ, காய, விதை(கொட்டை) இவைகளைப் பற்றிக் கூறவேண்டு மானல் என்னிலடங்கா. ஆதலின் அவைகளுள் சிலவற்றை மட்டும் இங்குக் கூறுகிறேன்.

பாகல் இலையால் கிருமிரோகமும், திரிதோஷமும் நீங்கும். விரோசனம் உண்டாகும். இதனுல் பாதரசவேகம் முறியும்.

மஹா மூலிகையாகிய முசுமுசுக்கை யிலைக்கு காசம், கோழை, சுவாசம், நெஞ்சிற் புகைச்சல், தொண்டைக் கம்மல், ஜலதோஷம் இவைகள் நீங்கும்.

கருணைத்தண்டால் மூலரோகமும் கபரோகமும், தாது விருத்தியும் நீங்கும். ஜீரணமும், பசியும் உண் டாகும்.

நல்ல பதார்த்தமாகிய வெண் கீரைத் தண்டினுல் வெப்பமும் வெளி மூலமும் பித்த எரிச்சலும் நீங்கும்.

புதியன் மூலிகை—இதுவே புதியனு. இதனுல் அருசி, மந்தாக்கினி (அஜீர ணம்) மலப்போக்கு இவை நீங்கும். போஜனமும் செல்லும் என்க.

அதி சுவையுள்ள சிறு பசலைக்கீரை தாகத்தையும், சூட்டையும் தணிக் கும். மலத்தையிளக்கும். கபத்தை யும் பெருக்கும்.

செங்கீரைத் தண்டு தீராத பித்த நோயை நீக்கும். பெண்களுக்கு ஏற் படும் பெரும்பாட்டையும் நீக்கும்.

நாவுக்கிதவாக உள்ள முளைக்கீரை காச சுரத்தை நீக்கும். பக்தி உணர் வைத் தரும். பல பிணிகளுக்கும் நற்கறியான அரைக்கீரையினுல்சுரம், நடுக்கல், சந்நிபாதம், கபரோகம், வாதநோய் இவை போகும் என்று கூறப்படுகிறது.

சிறு கீரையினுல் காசம், பாதரச வேகம், இரணம், மூத்திர கிரிச்சரம் பித்தநோய் இவைகள் போகும். முகத்தில் அழகுண்டாகும்.

பச்சை குங்குமப்பூவால், இன் சுவையால் பிறந்த துர்க்குணங்கள், நீரேற்றம், நாசி, நேத்திரம், செவி இவைகளைப் பற்றிய ரோகம், பயித் தியம் அல்லது பித்தம், சிலேத்தும தோஷம் இவை விலகும்.

துவர்க்கின்ற வாழைப் பிஞ்சுக்கு ரத்தக் கடுப்பு, ரத்த மூலம், அதி மூத்திரம், வயிற்றில் இரணம் இவை போகும்.

துவர்ப்புச் சுவையுடைய அத்திப் பிஞ்சால் மூல வாய்வு, கிராணி, ரத்த மூலம், வயிற்றுக் கடுப்பு இவை கள் போகும்.

பல பிணிகளுக்கும் பத்தியக் காயாக முருங்கைக் காயை கூற லாம். இரவு தங்கிய முருங்கைக் காயால் கபம் நீங்கும். விந்தூறும்.



மந்தாரப்பூவால் விழிக்கு குளிர்ச்சி ஏற்படும். சரீர வெப்பத்தை நீக் கும்.

வாழைப்பூ ரத்தமூலம், பிரமேகம், வெள்ளை பயித்தியம், கபாதிக்கம், உதரக்கடுப்பு, கை கால் எரிச்சல் இவைகளை நீக்கும். சுக்கில விருத்தி யைத் தரும்.

நந்தியா வட்டப் பூவினுல் நேத்தி நோய், சிரஸ்தாப ரோகங்கள் விலகும்.

துத்திப் பூவால் ரத்த வாந்தியும், காசரோகமும் நீங்கும். சுக்கில விருத்தியுண்டாகும். தேகத்தில் குளிர்ச்சி யுண்டாகும்.

துவர்ப்பு இனிப்பு ஆகிய இரு வகை சுவையுடன் கூடிய நெல்லிக் காயால் பித்தம், கப நோய், பீநசம், வாயில் நீர் சுரப்பு, வாந்தி, மல பந்தம், பிரமேகம் இவை போகும். உடலில் அழகுண்டாகும். பச்சைக் காயாகத் தின்ருல் பகலில்தான் தின்ன வேண்டும்.

மாங்காய் சுக்கில நாசம், மிகு வாய்பு, உடலில் சிரங்கு, தந்தங் கூசுதல், உடல் தோலில் வெடிப்பு, இரணம் உண்டாகும். பசி போகும்.

எலுமிச்சைங்காய் திரிதோஷம்,குன் மம், இடு மருந்து, பித்த உஷ்ணம் இவைகளைப் போக்கும்.

கத்தரிக்காய் ஆறிய சிரங்கை புதுப்பிக்கும். உடலில் நமைச்சலை உண்டாக்கும்.

கசப்புச் சுவையுடைய மலைச் சுண்டைக் காயால் மார்புச்சளி, கிருமி ரோகம், வாதாதிக்கம் ஆகி யவை போகும்.

கலியாண பூசணிக் காய் பித்த ரோகம், உட் காய்ச்சல், மூத்திர கிரிச்சரம், இடு மருந்து, பித்த ஜுரம், பேய்ச் சொறி, பிரமேகம் இவைகள் போகும். வாதாதிக்கம் உண்டாகும்

பரங்கிக்காய்-சிவப்பு பூசணிக்காய்-உடல் வெப்பத்தைக்குறைக்கும், மிகு பித்தத்தையும் நீக்கும். நல்ல பசியை யும், கபரோகத்தையும் விளைவிக்கும்.

விளாம்பழத்தையுண்ணில் சுவாச காசம், கபாதிக்கம், பித்த தாகம் இவை விலகும். உடலுக்குச் சுகமும், நல்ல பசியும் உண்டாகும்.

வாழைப் பழத்தால் உடம்பை வெளுக்கச் செய்கின்ற சோம அல்லது சோகை ரோகம், பித்த பிணிகள், மத நோய், மூர்ச்சை ஆகியவை போகும். சிறு குழந்தைகளுக்கு வேண்டுமெனில் நன்ருக பிசைந்து அளவோடு கொடுக்க வேண்டும்.

மிகு இனிப்புள்ள பலாப் பழத் திஞல் வாத பித்த - தொந்தங்களை யும், கரப்பானையும், முன்னில்லாத பிணிகளையும் உண்டாக்கும்.

மாம்பழத்தைத் தின்றிடில் நமைச் சலும் மார்பில் எரிச்சலும், கண்ணோ யும், கருங்கரப்பானும் அதிகரிக்கும். பசியில் உண்டால் பசியை நீக்கும். இதில் இரும்புச்சத்து அதிகமென்பர்.

எலுமிச்சம் பழத்திஞல் தாகம், நகச்சுற்று, யானைக்கால், உன் மத்தம் (பைத்தியம்) பித்தம், கண்ணோய், வாந்தி நீங்கும்.

மாதுளம் பழத்திஞல் நினைப்பை யும் பேச்சையும் ஒழித்து, சந்தேகத் திஞல் ஏற்படும் சந்நியாச ரோகம் நீங்கும். பழத்தைத்தின்பதால்வாயில் நீர் சுரப்பு, வாந்தி, விக்கல், மாந் தம், நெஞ்செரிவு, காதடைப்பு, நீங்காத மயக்கமும் ஒழியும். வெடித்த பழத்தை அப்போதே பிழிந்து மெல்லிய துணியில் வடி கட்டி அதனுடன் தகுந்த கற்கண்டு சேர்த்து சாப்பிட்டு வர சரீரக் குளிர்ச்சி யுண்டாகும். தேகத்தில் தேஜஸ் உண்டாகும்.

பேரீச்சம் பழத்தால் வாயில் நீரை சுரப்பிக்கின்ற பித்த ரோகம், நீர்ச் கோவை, தாகம், ரத்த பித்தம்,

முந்திரிக் கொட்டையினுள் உள்ள பருப்பை தின்பதால் பித்தவாத தொந்தம், அக்கினி மாந்தம், தாது விருத்தி உண்டாகும். இந்திரியம் பெருகும். ஆனால் கொஞ்சம் நீர்க் கும்.

அடப்பம் விதை என்னும் வாது மைக் கொட்டையுள் உள்ள பருப் பைத் தின்ருல் விழிப் படலமும், இரணக் கொழுமையும் நீங்கும். சுக் கிலம் கெட்டிப்படும்.

சாரப் பருப்பு, மிசரிப் பருப்பு இவைகளால் சிறு நீரைப் பற்றிய

மாங்கொட்டையினுள் உள்ள பருப்பிஞல் சீதபேதி, ரத்தாதி சாரம், உதிரக் கடுப்பு மூலச் சூடு ஆகியவை விலகும்.

தோலில் துவர்ப்புள்ள புளியங் கொட்டையிஞல் சுக்கில மேகம், பித்தாதி சாரம், அதிவிரணம், மூத் திரக் கடுப்பு, வெள்ளை இவைகள் நீங்கும்.

எட்டிக் கொட்டையிஞல் கரு மேகம், சன்னி, விஷக்கடி, குஷ்டம், வாதவலி, வீரிய நஷ்டம், கரப்பான், மூர்ச்சை, பயித்தியம் இவை போகும்.

முருங்கை வித்திஞல் ஜல ரூபமாக கரைந்த விந்துவும் பிசினி போலா கும். சரீரம் பலக்கும். இதன் இலை யும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும்.

வெங்காய விதை குன்மத்தையும், துளசி விதை சீதளத்தையும், கரி சாலை விதை காமாலையையும், உருத் திராட்ச விதை மயங்குகின்ற கபத் தையும் போக்கும்.

வெள்ளரி வித்திற்கு கடுக்கின்ற நீரடைப்பு, நீர் துவார வெடிப்பு, சதையடைப்பு, பிரமேகம், கிரிச் சரம் இவை நீங்கும்.

சிவந்த குன்றிமணி விதையின் பருப்பிஞல் கண்ணோய், பித்த நோய் மாறும். வியர்வையோடு வெப் பத்தைத் தருகின்ற மூர்ச்சை சுரம், சிலேஷ்ம கோபம் நீங்கும். சுக்கில விருத்தியுண்டாகும்.

(தொடரும்)

பண்டைய உபநிஷதங்கள் இறைவனுக்கும் தேவிக்கும் உரிய சிறப்பான அணிவகைகளைக் குறிப்பிடுகின்றன. நால்வேதங்களில் ரிக்வேதம் காந்தி என்ற கவர்ச்சிமிக்க ஆபரணம் பற்றிக் கூறும். காவியங்களில் அனுமனிடம் இராமன் கொடுத்த கணையாழியும், ஸீதாதேவி கொடுத்த சூளாமணியும் இராமாயணம் மூலம் புகழ் பெற்று விட்டன. சிலம்பைச் சுற்றிப் பின்னப்பட்ட இணையிலாக் காப்பியமே சிலப்பதிகாரமாகும்.

தெய்வங்கட்கு உரிய திருவாபரணங்களை மானஸாரம், சில்ப ரத்னம் என்ற நூல்கள் விரிவாகக் குறிப்பிடுகின்றன.

தெய்வங்கட்கு முடி ஆபரணம் மூன்று வகைப்படும். அவை கிரீட மகுடம், காண்டமகுடம், ஜடாமகுடம் எனப்படும். தாமரை மொட்டைப் போன்ற கூம்பிய வடிவம் கொண்டது கிரீட மகுடமாகும். இந் நகை விஷ்ணுமூர்த்தங்கட்கு சிறப்பாக உரியதாகும். இது மூர்த்தத்தின் தோற்றத்திற்குப் பொலிவு கூட்டும். பூரிததுங்கதாரம், அகரப்பட்டு, திரிலேதிகம், திரிவேத்ரகம், பத்மம், குட்கல சிகாமணி, மௌலி பந்தம், வல்லி, முக்தாஹாரம் எனும் சிறு அணிகள் கிரிட மகுடத்தை அழகு செய்வனவாகும். கிரீட மகுடத்தின் பக்கவாட்டில் கர்ண புஷ்பம் என்ற மலர் வடிவ அணிகள் அணி செய்யும். கேசபந்தம், தம்மிளா, சிரஸ்சக்ரம் எனும் தலையணிகள் எல்லாமூர்த்தங்கட்கும் பொதுவானவை.

பார்வதிதேவி, மஹாலக்ஷ்மி, பூதேவி ஸரஸ்வதி என்ற பெண்தெய்வங்களின் தலையாபரணம் கரண்ட மகுடம் எனப்படும். இது மிகவும் கவர்ச்சிகரமானதாகும்.

பரமேச்வரனுக்குச் சிறப்பாக உரிய தலையாபரணம் ஜடாமகுடமாகும். உத்தரகாரணம், காமிகம் முதலிய சிவாகமங்களில் இந்த ஆபரணத்தைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஜடாமகுடத்தில் சிவபிரானுக்குரிய பிறைச்சின்னத்தைக் காணமுடியும்.

தெய்வங்களின் காதணி, ''குண்டலங்கள்'' எனப்படும். ஸர்ப்ப குண்டலங்கள் எனும் நாகவடிவக் குண்டலங்கள் சிவபிரான் வடிவங்களில் காணப்படும். சங்கு புஷ்பத்தைப் போன்ற சங்கபத்ரகுண்டலம் திருமாலுக்குரியது. அம்பாள் மூர்த்தங்களில் தோளைத் தொடும் நீண்ட குண்டலங்கள் இருக்கும்.

உபக்ரீவம் என்னும் அணி ஜடையைச் சுற்றி ஆண், பெண் இருதெய்வ மூர்த்தங்கட்கும் பொதுவாகக் காணப்படும். ஹாரம் என்னும் மற்றொரு தலைஆபரணம், நுண்ணிய ரத்னக்கற்களால் இழைக்கப் பட்டிருக்கும். ஹிரண்யமாலை எனும் முழுவதும் பொன்னாலான அணி நெக்லஸ் போன்று தலையைச் சுற்றி அணிவிக்கப்பட்டிருக்கும். தெய்வங்களின் தோள்களில் காணப்படும் ஆபரணம் 'ஸ்கந்தமாலை' எனப்படும்.

காந்தி எனப்படும் ஆபரணம் இறுகிய கழுத்தணியாக எல்லாவகை தெய்வமூர்த்தங்களையும் அழகு செய்யும். இறைவனின் முன்கரத்தைக் கட்க வளையமும், விரலை அங்குலீயமும் அணிசெய்யும்.

மதுரை மீனாட்சி அன்னைக்குத் தங்கக்கிளியே ஒரு ஆபரணமாகச் சூட்டப்படுகிறது. மஹாவிஷ்ணுவுக்கு சங்க சக்ரங்களும், சிவனுக்கு மானும் உடுக்கையும், அம்பாளுக் குத்தாமரை மலரும், முருகப் பெருமானுக்கு வேலும் கொடியும், மஹா கணபதிக்கு மோதகம் எனும் கொழுக் கட்டையும் கூட ஆபரணமாக வைரம் பதித்து அழகு செய்யப்பட்டுச் சூட்டப்படுகின்றன.

பாற்கடலில் ரங்கநாதரின் பள்ளி கொண்ட தோற்றத்தைச் சித்தரிக்கும் ரங்கவிமானம் என்னும் அணி திருவரங்கம் பெருமானின் பலவகை வைர அணிகளுள் முதன்மையிடம் வகிப்பதாகும்.

திருப்பதி ஸ்ரீவேங்கடாசலபதியின் ஆபரணங்கள் உலகப்புகழ் பெற்றவை. நவரத்னங்களில் மதிப்பே சொல்ல இயலாதவை பெருமானின் அழகிய திருவுடலை அழகு செய்கின்றன. சங்கு, சக்ர, வைஜயந்தி, மகர கண்டி, லக்ஷ்மீஹாரம் மற்றும் கர்ண குண்டலங்கள் போன்ற ஆபரணங்கள் இவற்றில் குறிப்பிடத்தக்கன.

தேவி கன்னியாகுமரி அன்னையின் மூக்குத்தி வைரஒளி மரக்கலத்தையே திசைத்திருப்ப வைத்தபுகழ் பெற்றதாகும். பத்ராசலம் ஸ்ரீராமபிரான் பக்த ராமதாஸ் சூட்டிய ஒப்புயர்வற்ற ஆபரணங்களைச் சூடி இன்றும் அருள் பாலிக்கிறார். திருச்சி திருவானைக்கா அகிலாண்டேச்வரியின் தாடங்க அழகை ஆதிசங்கரர் போற்றியுள்ளார். குருவாயூர்க்குழகனின் சின்னஞ்சிறுக் குழந்தை உடலை ஒப்புயர்வற்ற ஆபரணங்கள் அழகு செய்கின்றன. கொச்சி வம்ச அரசர்களின் காணிக்கை இவையாகும். ஐயப்பனின் திருவாபரணங்கள் பந்தளத்தில் பாதுகாக்கப்படுகின்றன. ஐரோப்பியர் இத்தகைய புராதன பொக்கிஷங்களான திருவாபரணங்கள் பலவற்றைக் கவர்ந்து சென்று விட்டனர். சில ஐரோப்பியர் நம் தெய்வங்களின் சக்தியை உணர்ந்து நன்கொடையாகவும் அளித்துள்ளனர். இவற்றைப் பேணிக் காப்பது நம் கடமையாகும்.

திரு. பி. ரவீந்திரன், பி.ஏ.,
திப்பிராஜபுரம்.



# குமரி மாவட்ட ஆலய அதிசயங்கள்

பாரத நாட்டிலுள்ள ஆலயங்கள் இறையருளால் நிகழும் அதிசயங்களுக்கும் நம் முன்னோர்களின் சிற்பத்திறனால் விளைந்த அதிசயங்களுக்கும் பெயர் பெற்றவை. இந்தக் கட்டுரையிலே குமரி மாவட்ட ஆலயங்களில் காணப்படும் அதிசயங்களை மட்டும் சுருக்கிக் கூறுகிறேன்.

நாகர்கோயில்–கன்னியாகுமரி சாலையில் நாகர்கோயிலிலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள சுசீந்திரம் என்னும் ஊரில் சிவன், திருமால், பிரம்மா ஆகிய மூவரும் குடிகொண்டருளும் தாணுமாலயன் ஆலயம் உள்ளது. மும்மூர்த்திகள் காட்சியளிக்கும் ஆலயம் உள்ளது. மும்மூர்த்திகள் காட்சியளிக்கும் ஆலயம் என்பதைத் தவிர வேறு சில சிறப்புக்களும் இந்த ஆலயத்திற்கு உண்டு.

இங்குள்ள அனுமார் சிலை பதினெட்டடி உயரமுள்ளது. பாரதத்திலேயே இதுதான் மிகப்பெரிய சிலையாக இருக்கமுடியும்.

பாரதத்தின் மிகச்சிறிய அனுமார் திருவுருவமும் இங்கேதான் உள்ளது. சீதாப் பிராட்டியைத் தேடியலைந்த அனுமனை அசோகவனத்தைக் காவல் புரிந்து வந்த சுரசா எடுத்து விழுங்க அவன் தன் உருவைச் சிறியதாக்கி அந்த அரக்கியின் காது வழியே வெளியேறியதாகக் கூறும் இராமாயண நிகழ்ச்சியைச் சித்தரிக்கும் சிற்பத்தில் காணப்படும் அனுமார் வடிவமே, பாரதத்தின் அனுமார் சிலைகளில் மிகவும் சிறியதானது.

இந்தியாவிலேயே இரண்டாவதாகக் கருதப்படும் மிகப்பெரிய நந்தி இங்கேதான் உள்ளது. இந்நந்தியின் உயரம் பன்னிரண்டு அடி. வெண் சுதையால் இது செய்யப்பட்டுள்ளது.

இங்குள்ள கல்லினால் செய்யப்பட்ட இசைத்தூண்கள் பல்வேறு இசைக்கருவிகளின் ஒலிகளை எழுப்புகின்றன.

இங்கு விநாயகர் பெண்உருவில் கணேசனி என்ற பெயரோடு காட்சியளிக்கிறார். இதுவும் இவ்வாலயத்தில் மட்டுமே காணக்கூடிய காட்சியாகும்.

சுசீந்திரத்திற்குத் தெற்கே மூன்று மைல் தொலைவிலுள்ள மருங்கூர் ஆலயத்தில் சூரசம்ஹாரத்தின்போது செய்யப்படும் சூரன் 24 அடி உயரம் கொண்டவன். இத்தகைய பெரிய சூரன் தமிழகத்தின் வேறெந்த ஆலயத்திலும் செய்யப்படுவதில்லை.

நாகர்கோவிலிலுள்ள நாகராஜர் ஆலயம் நாகப்பாம்புகள் நிறைந்தது என்றாலும் இவ்வட்டாரத்தில் கோவிலைச் சுற்றி ஒரு மைல் வட்டாரத்திற்கு பாம்பு கடித்து எவரும் இறந்ததில்லை. Encylopaedia of Religion and Ethics Vol IX p.418 இதனை உறுதிப்படுத்துகிறது.

மூலத்தானத்தில் நாகராஜர் அமர்ந்துள்ள இடத்திலிருந்து எடுக்கப்படும் மண்ணே இங்கு பிரசாதமாக தலைமுறை தலைமுறையாக வழங்கப்படுகிறது. என்றாலும் இந்த மண் அள்ள அள்ளக் குறையாமல் இருந்து வருகின்றது. இது வருடத்தில் ஆறு மாதம் கருமையாகவும் எஞ்சிய நாட்களில் வெண்மையாகவும் காணப்படுகிறது.

நாகர்கோவிலிலுள்ள தழுவிய மகாதேவர் ஆலயத்தில் சிவபெருமான் சுரதேவர் உருவில் காட்சியளிக்கிறார். மூன்றுதலைகள், ஒன்பது கண்கள், நான்கு கைகள், மூன்று கால்கள் கொண்ட திருவுருவம் சுரதேவர் உருவமாகும்.

தமிழ் மூதாட்டியான ஔவைக்கு குமரி மாவட்டம் தோவாளையில் மூன்று ஆலயங்கள் உள்ளன. தமிழ் வளர்த்த அகத்தியருக்கும் இங்கே பல கோவில்களும் உள்ளன.

கேரளபுரத்தில் எழுந்தருளியிருக்கும் விநாயகர் சிலை சந்திரகாந்தக் கல்லால் உருவாக்கப்பட்டது. இத்திருவுருவச் சிலை ஆவணியிலிருந்து மாசிவரை வெண்மை நிறமாகவும், மாசி முதல் ஆவணிவரை கருமையாகவும் காட்சியளிக்கிறது.

திப்பரமலையிலுள்ள ஆலயத்திலுள்ள திருமால் சிலையே திருமாலின் சிலைகளிலே மிகவும் உயரமானதாகும். இத்திருவுருவம் பன்னிரண்டு அடி உயரமுள்ளது.

திருவட்டாறு ஆதிகேசவப் பெருமாள் ஆலயத்தில் 18 அடி சதுரமும் 3 அடி உயரமும் கொண்ட ஒரே கல்லின்மேல் எழுப்பப்பட்டுள்ள ஒற்றைக்கல் மண்டபம் பொறியியல் வல்லமைக்கு ஒரு சான்று.

இங்குள்ள பலி மண்டபத்தின் அருகில் நடராஜர் நடனமாட பிரம்மாவும், விஷ்ணுவும் பக்கவாத்தியங்கள் ஏந்தி நிற்கும் காட்சி காணக் கிடைக்காத ஒன்று.

இங்ஙனம் எண்ணற்ற அதிசயங்களுடன் விளங்கும் குமரி மாவட்டக் கோவில்கள் கண்டு களிக்கத்தக்கவை.



திருமதி. வே. சரோஜா நாகமணி
நெய்யூர்.

# முருகனும் மூதாட்டியும்

ஆண்டவனுடைய திருவிளையாடல்கள் யாவும் அற்புதமானது. தத்துவம் நிறைந்தது. பக்தர்களைச் சோதனைச் செய்து பார்க்கும் சாதனைபது. அவ்வகையிலே ஔவையோடு கலாவிநோதஞ் செய்து காட்டியது தமிழோடு விளையாட வந்த லீலையேயன்றி வேறல்ல என்பதாம். இப்படியாக ஔவை பிராட்டியாருடன் திருவருள் விநோதம் செய்தருளிய மூர்த்தி முருகன் என்பர்.

முத்தமிழுக்கும் தலைவன், செந்தமிழ் வித்தகன் கவிபாட வந்த இடத்தில் மனம் மகிழ்ந்து ஔவையின் மழலை மொழி கேட்டு களித்தான். சக்தி வேல் முருகனும் பக்தியாய் மகிழ்ந்திருந்த கதையே அது. உலகத்து மக்களை நன்னெறிப்படுத்துவான் வேண்டி பரம்பொருள் ஏற்ற பல்வேறு திருவிளையாடல்களுள் ஔவையோடு விளையாடி விநோதஞ் செய்த முருகக் கோலம் முக்கியமானதாகும்.

தேய்ந்த மரை, ஆணி, இன்னும் மற்றது உதவாது. ஆனால் ஒரு பொருள் தேய்ந்தால்தான் உதவும், உயரும். அது என்ன? அதுதான் அகங்காரம். அகங்காரம் தேய்ந்தால் தான் அமுதம் கிடைக்குமென்பர் பெரியோர். ஆணவத்தின் உருவமாக கல்வியறிவிற் தமக்கு நிகராவார் ஒருவருமிலர் என்னும் எண்ணத்தான் அகங்காரமுற்றுக் கிடந்து திகழ்ந்த ஔவையை கார்த்திகேயனின் கருணையன்றோ இறுமாப்பொழித்துக் காத்தது. அத்தகைய திருவருள் திறத்தை ஒரு சிறிது இங்கு தொகுத்துப் பார்ப்பது சிறப்புடையதாகும்.

''முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பான் முருகன்.'' இது அருணகிரி வாக்கு. முத்தமிழே முருகன் வாழும் ஆலயமாகும். பக்தி முதிர்ந்த மனம் முருகன் ஏறும் பொன் மயிலாகும். அகஸ்தியர்க்கும், அருணகிரிக்கும், நக்கீரர்க்கும், ஔவைக்கும், குமர குருபரனுக்கும் செந்தமிழ் எடுத்துத் தந்தவன். சந்ததமும் சங்கத் தமிழ் பாட அநுக்ரஹித்த வள்ளல் இவன் என்றால் மிகையாகாது. இது அவனின் கருணை, மற்றும் பரமகிருபைப் பற்றியே யாகும் என்பர்.

ஏட்டிலே எழுதி வைத்து அன்பரின் கூட்டிலே பதிய வைத்த மஹான்கள் இவர்கள். இவர்கள் மூலம் பக்தி உலகு பெருமித மடைந்தது; கீர்த்தி பெற்றது.

தந்தையறிவு மகனறிவு என்பர். அதுபோல தமிழறிவு முருகன் என்பர். ஏனெனில் தந்தைக்கு உபதேசித்த குருநாதனல்லவா அவன். அதனால் தமிழ்த் திருவுருவம் தண்டபாணி எனவும் தமிழ்க் கலையாவும் அவன் திருமேனி என்றும் போற்றுவர் அறிஞர் பெருமக்கள். தொல்காப்பியம் முதலிய பழந்தமிழிலக்கணங்கள் முருகன் வழிபாட்டைப் போற்றுகின்றன.

செந்தமிழ் பரமாச்சார்யனாக விளங்கும் அவனை ஒரு முறை 'முருகா!' என்றால் போதும் உயர்கதி வரும். அதனால் பழங்காலம் முதல் இவன் மஹிமையே உருவெடுத்தவன் ஆக விளங்குகிறான். சங்க இலக்கியப் புகழோடு சமய இலக்கியச் சிறப்பும் கொண்ட இத்தமிழ்க் கடவுளை பேசாத பாடாத கவிகளும் இல்லை என்பது புராண வரலாறு.

ஒரு சமயம், தெய்வப் புலமை கைவரப்பெற்ற ஔவையார் தனக்கு நிகராவார் ஒருவருமிலர் என்ற எண்ணத்தான் அகங்காரமுற்று அரச சமஸ்தானத்தை வெறுத்து காட்டு வழியாக வருவாராயினர். வரும் வழியில் செவ்வேள் தம் உருவை மறைத்து பசுக்களை மேய்க்கும் ஓர் ஆயச்சிறுவனாகி கோல் கைக்கொண்டு நாவல் மரத்திலேறி பழம் தின்பார் போல் நடித்து நின்றார்.

பசியினால் வருந்தி நின்ற ஔவையார் அவரை நோக்கிக் 'குமாரனே பழத்தில் மிக்க விருப்புடையவனாயிருக்கின்றேன். எனக்குப் பசி நீங்க சிலப்பழம் கொடுக்க' என்றனர். அது கேட்ட கந்த நாதராகிய பாலனார் 'சுட்டப்பழம்வேண்டுமா? சுடாதபழம் வேண்டுமா? எதுவென உரைப்பையேல் இக்கணமே கொடுப்பேன்' என்றார்.

அருள் நோக்குக் காரணமாக நாவற்கனிகளில் சுட்டப்பழம் சுடாத பழம் என்ற புதுமையைப் புகுத்தினான் கடவுள். ஔவையார் இது கேட்டு திகிலடைந்தார். நாவற்கனிகளில் யாண்டும் இதுபற்றி கேட்டிலேம். சுடாத கனிகளே யாம் அறிந்துள்ளோம் கேட்டுள்ளோம் என்று

திரு. எஸ். ஜெயராமன்,
சேலம் டவுன்.

அதனை யறியும் பொருட்டு 'சுடு கனியே' தருகவென உரைத்தார். குமார சுவாமியாம் பால வடிவினர் அறக்கனிந்த சிலப்பழங்களை மணலில் எறிந்தார். ஔவையும் அவற்றை எடுத்து பசிக்கடுமையால் விரைவில் தின்ன விரும்பி பழங்களில் ஒட்டியிருந்த மண் போகுமாறு வாயால் ஊதினார். அதனைப் பார்த்தக் கார்த்திகேயப் பெருமான் கைத் தட்டிப்பரிகசித்தார். 'கிழவியே! பழம் சுடுகிறதா? சுட்டதா?' என எள்ளி நகைத்தார்.

நாவற்கனியை கையால் எடுத்ததும் மண் போக வாயால் ஊதியதைக் கண்ட பாலமுருகன் அற்புதஞ்

செய்ததைக் கண்டு ஔவையார் பெரிதும் நாணி 'அறிவின் முதிர்ந்து இணையில்லா நுண்ணறிவுடைய பிறப்பு யாமேயென்று இறுமாந்தோமன்றே? சிற்றுளியானே பெருமலை தகர்த்தொழிதல் கண் கூடே. குறுமுனி சிறு கையுட் பெருங்கடல் உழந்தள வாகிப் பருகப்பட்டதே! அறிவு யாரிடத்தடங்கிற்றம்ம! மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தியுடைச் சொல் இருத்தல் கண்டேன். அறிவுக்கும் அவதியுண்டு, அதுவும் சமயத்தில் மயங்கி போகும் என்று கண்டு கொண்டேன்.'

'இதுகாறும் எவராலும் வெல்லப் படாமல் எத்தனைக்கூரியமதி கொண்டு நல்லிசைப் புலவர்களையெல்லாம் வென்று சிறந்து விளங்கினேன், அன்று. இன்று ஒரு குழந்தை என்னை வென்று விட்டானே' என்று துக்கத்துள் ஆழ்ந்தார்.

முருகனும் 'முதியாய்! நுண்ணுணர்வுடையராய் நூலோடு பழகினும்— "பெண்ணறிவென்பது பெரும் பேதமைத்தே" என்பது அறிந்ததே. ஆதலால் வருந்தாதே. 'மனமே! அவனன்றி ஓர் அணுவும் அசையாதே' என்று தமது சுயவடிவத்துடன் தோன்றி முன்நிற்க, ஔவையார் முருகத்திருக்கோலங்கண்டு தம்மை மறந்து பரவசமானார். இங்ஙனமாக செந்தமிழ் துரை ஔவையாரை ஆட்கொண்டருள செய்தது நாவற்பழக் கதை. இறுமாப்பு ஒழியப் பலவாறு அற்புதம் செய்தனன் என்பதாம்.

பகவன் என்பவர்க்கும் ஆதியென் பாட்கும் புத்திரியராகச் சரஸ்வதி தேவியின் அம்சமாக பிறந்து கணபதியாகிய விநாயக் கடவுளைப் பூஜித்து அவரது திருவருளினாலே தெய்வப் புலமை கைவரப் பெற்றவர் ஔவையார். அரச சமஸ்தானத்தில் கல்வியறிவிற் நிகரற்று விளங்கியவர், இவர் ஒரு தமிழ்ப்பெரும் புலவர். ஔவைக்குக்கோயில் உண்டு என்றறிகிறோம். ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், விநாயகர் அகவல், சரவண பவன் மகிழ இனியன எல்லாம் வினவியருளியவர். மதுரமொழியே முருகனுக்கு உவகை அளித்ததாயிற்று.

கலாவிநோதம் நடத்தவந்தக் கடவுள் ஔவையிடம் இனியது எது? என்று வினவியருளினார். ஔவையார் உரைப்பார்.

"இனியது கேட்கிற் றனிநெடுவேலோ
யினிது வினிது வேகாந்த மினிது
வதனினு மினிது லாதியைத்தொழுத
லதனினு மினிது வறிவினர்ச் சேர்த
லதனினு மினிது வறிவுள்ளோரைக்
கனவினு நனவினுங் காண்பதுதானே
(இனியது)

அதற்குச் செவிசாய்த்த பெருமானார் 'கலைக்கிழத்தியே நன்று, நன்று. இனியன கூறினை. கொடியனவற்றையும் இக்குவலயம் உணர்ந்தொழுகுமாறு தெரித்தி' யென்று ஆஞ்ஞாபித்தார். அதற்கு உத்தரமாக—

"கொடியது கேட்கி னெடியவெவ்
வேலோய்
கொடியது கொடியது வறுமை
கொடியது
வதனினுங் கொடியது விளமையில்
வறுமை
யதனினுங் கொடியது
வாற்றொணுக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பில்லாப்
பெண்டிர்
அதனினுங் கொடிதிங் கறைமி-
னின்புற அவள் கையிலுண்பதுதானே
(கொடியது)

என்ற கவியை ஔவையார் சொற்றனர். அது கேட்ட குமரேசப்பெருமாள் அரியவற்றுளெல்லாம் அரியது யாது? என்று வினவியருளினர். ஔவையார்,

அரியது கேட்கின் வரிவடி வேலோ
அரிது அரிது மானுடராதலரிது
மானுடராயினுங் கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தலரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையு
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியும் நயந்தகாலையுந்
தானமும் தவமுந் தாஞ் செய்தலரிது
தானமுந்தவமுந் தாஞ் செய்வராயின்
வானவர் நாடு வழி திறந்திடுமே
(அரியது)

என விரைவாக உத்தரங் கூறினர். பெரியவற்றுளெல்லாம் பெரியது யாது? என்று வள்ளி நாயகனார் கேட்டருளினர். ஔவையார் கார்த்திகேய பெருமான்தன் கழலடியை வணங்கி, "எங்கள் தெய்வமே! செந்தமிழ் பரமகுருவே! தேவரீர் அறியாத தொன்றுண்டோ? எல்லாஅறிவுமுடைய தேவரீர் நாயினுங் கடைப்பட்ட பேதையேனை வினவல் தாய் தந்தையர் குழலிவாய் மழலைமொழி கேட்டு களிப்பது போன்றதே' என்று கூறுவாராயினர்;

பெரியது கேட்கி னெரிதவழ்வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமாலுந்தி வந்தோன்
கரியமாலோ வலைகடற் றுயின்றோ
னலை கடல் குறுமுனியங்கையிலடக்கங்
குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ வரவினுக் கொருதலைப்பார
மரவோ உமையவள் சிறுவிரல்
மோதிரம்
உமையோ இறைவர் பாகத்தொடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத்து
ஒடுக்கம்
தொண்டர் தம் பெருமையைச்
சொல்லவும் பெரிதே—(பெரியது)

என்று கூறியது கேட்டு சரவண பவனார் மகிழ்ந்து 'ஞான பண்டிதாய்! இனியன, கொடியன, அரியன, பெரியன மொழிகேட்டு உள்ளம் உவகையுற்றோம். பசி, பிணி, நரை, திரை முதலியனவின்றி நெடுங் காலம் வாழ்வான் வேண்டி சேரநாட்டிலே அதிகமான் நெடுமான் வஞ்சியைப் பாடி கருநெல்லி அமிழ்தை உண்டு நன்கு வாழ்தி' என்றருளி அந்தர்த்தானமாயினர்.

அங்ஙனே ஔவையார் கொங்கு நாட்டுக் கருவூர்கட்சென்று ஆங்கரசிருந்த அதிகமானெடுமான் வஞ்சியைப்பாடி நெல்லிக்கனியுண்டு நெடுநாள் வாழ்ந்திருந்ததாக வரலாறு. இங்ஙனம் சுப்ரமண்யப்பெருமான் ஔவைப் பிராட்டியாருடன் கலா விநோதஞ் செய்தருளிய கதையை அறிக.

அகந்தை தலைக்கு ஏறினால்ஆபத்து. அது உடைந்தால் அமுதம் கிடைக்கும் என்பது ஆன்றோர் கருத்து. அது அவ்வளவு எளிதில் கைவரக் கூடிய காரியமில்லை. அதற்கு ஆண்டவன் திருவருள் கூட்டவேண்டும். அகங்காரம் அழிய வேண்டுமென்பதே நியதி. இப்படி அருட்திருவிளையாடல் நடத்தியக்கதையே இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

★

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

நமது வாழ்வினில் நாம் இதைக் கண்கூடாகக் காணலாம். நெறி தவறி நடப்போர் மாட மாளிகை கூட கோபுரத்தில் இருப்பது போல பிறருக்குத் தெரிந்தாலும் அவர்கள் பொருள் பெற்ற பயனை அடையாது எப்பொழுதும் குறுகுறுத்துக் குடையும் மனத்தினராய் தூக்கத்திற்கு மாத்திரை தேடி அலைந்து கொண்டிருப்பர். அது என்ன வாழ்வு! நரக வாழ்வு அன்றோ அது! நேர்மையான வாழ்வு வாழ்ந்து அமைதியான மனத்துடன் கஞ்சி குடித்து விட்டு மண்தரையில் தன்னை மறந்து கட்டை போல சொர்க்க இன்பத்திற்கு நிகரான தூக்கம் தூங்குகின்றானே! அவனல்லவோ பாக்கியவான்! பக்தன் நேர்மையாளன் என்பதால் அவனுக்குத் துன்பமோ துயரமோ கிடையாது. இதை 'கதவ்யத' என்று பகவான் குறிப்பிடுகிறார். பயம் அற்றவன் என்றும் இதை நாம் பொருள்படுத்தலாம். பிறர் தம்மை அடித்தாலும் தூஷித்தாலும் அதை அவன் பொருட்படுத்தவே மாட்டான். நேர்மையான வழியில் செல்லும் ஒருவர் எக் காலத்தும் எதைக் குறித்தும் பயப்படத் தேவையில்லை. அவனைச் சுற்றி என்ன நிகழ்ந்தாலும் அதனால் அவன் கொஞ்சமும் பாதிக்கப்படாது தாமரையிலைத் தண்ணீர் போலத் திகழ்கிறான்.

இத்தனை குணங்களை உடைய பக்தன் செயலற்று சும்மா இருக்கவும் மாட்டான். அவன் சதா கருமங்களில் ஈடுபட்டவனாகக் காணப்படுவான். ஆனால் எந்தக் கருமம் செய்தாலும் அதனது பலனில் பற்று வைக்காமல் 'செயல் செயலுக்காகவே' (wook for worksake) என்ற மனப்பாங்குடன் செயலாற்றுவான். அதாவது ஏற்கனவே விளக்கமாகக் குறிப்பிட்டது போன்று ஸர்வ கர்ம பலத் தியாகம் செய்த தியாகியாக அவன் விளங்குவான். தனக்கென அவன் எந்தக் கருமத்தையும் செய்ய மாட்டான். அவன் செய்யும் ஒவ்வொரு கருமமும் பிறருக்கு, அதாவது உலகத்துக்கு நலம் பயப்பதாக அமையும். அதே வேளையில் இறைவனிடத்திருந்து அவன் எதையும் எதிர்பார்ப்பதில்லை. அத்தகைய பக்தன் பகவானுக்குப் பிரியமான பக்தன் ஆகிறான்.

மேலும் பக்தன் எப்படி இருப்பான்?

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி
ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுபபரித்யாகி
பக்திமான யஃ ஸ மே ப்ரியஃ ॥17॥

'மகிழ்தலும் வெறுத்தலும், துன்புறுவதும் ஆசைப்படுவதுமின்றி நன்மை தீமைகளைத் துறந்த பக்தனே எனக்குப் பிரியமானவன்',

பக்தனின் பெருமையைப் பற்றி பாகவதம் கீழ்க்கண்டவாறு எடுத்துரைக்கிறது:

ந பாரமேஷ்ட்யம் ந மஹேந்த்ர
திஷ்ண்யம்
ந ஸார்வ பௌமம் ந ரஸாதி
பத்யம் ।
ந யோக ஸித்தி ரபுனர்பவம் வா
மய்யர்ப்பிதாத் மேச்சதி மத் விநா
அன்யத் ॥
—பாகவதம்.

'என்னிடம் மனதை அர்ப்பணம் செய்தவன் பிரம்மாவின் பதவியையோ, இந்திர பதவியையோ, பூலோகத்தையாளும் பதவியையோ, பாதாளத்தின் ஆட்சியையோ விரும்ப மாட்டான். மோட்சத்தையும் கூட அவன் விரும்பமாட்டான். என்னைத் தவிர அவன் வேறு எதையும் விரும்ப மாட்டான்'.

இனிப் பெற வேண்டியது என்று எதுவும் இல்லையாகையால் பெறுத ஒன்றைப் பெறுவதால் ஏற்படும் மகிழ்ச்சி அவனுக்கு ஏற்பட வாய்ப்பில்லை எல்லாவற்றிலும் அவன் பகவானையே காண்பதால் எதையும் அவன் வெறுக்கமாட்டான். எதனாலும் அவனுக்குத் துன்பத்தைத் தர இயலாது என்பதால் அவன் துன்பமடையமாட்டான். ஆசைகளை எல்லாம் வென்றவன் என்பதால் ஆசைகள் அவனைக் கண்டு அஞ்சி ஒதுங்குகின்றன. சுபம், அசுபம் ஆகியவற்றையெல்லாம் அவன் கடந்து நிற்கின்றான்.

பகவான் இங்கு பக்தனுடைய பெருமைகளை எடுத்து இயம்புவது போலவே, விபூதி நாராயணோபநிஷத் பக்தியினுடைய பெருமையைப் பற்றிக் கூறுகிறது.

பக்த்யா விநா ப்ரஹ்மஜ்ஞானம் கதா
பி ந ஜாயதே
ஸர்வோபாயான் பரித்யஜ்ய பக்தி
மாச்ரய ।
பக்தி நிஷ்டோ பவ । பக்தி நிஷ்டோ
பவ ।
பக்த்யா ஸர்வே ஸித்தயஃஸித்தயந்தி।
பக்த்யா அஸாத்யம் ந கிஞ்சிதஸ்தி ॥
-த்ரிபாத் விபூதி நாராயணோபநிஷத்

'பக்தியில்லாமல் பிரம்மஞானம் ஒரு போதும் உண்டாகாது. மற்றெல்லா உபாயங்களையும் விட்டு பக்தியைக் கைக் கொள். பக்தியில் எல்லா சித்திகளும் சித்திக்கும். பக்தியால் ஆகாதது ஏதுமில்லை.'

இதைப் படிக்கையில் ஞானத்துக்கு ஏற்றம் தரும் கீதையின் கருத்துக்கு மாறுபடுவதுபோன்று தென்படலாம். அப்படி அல்ல. ஈண்டு பக்தி என்பது ஞானத்துடன் கூடிய பக்தியேயாகும். ஆர்த்தன், ஜிக்ஞாஸு, அர்தார்த்தி, ஞானி என்று பகவான் குறிப்பிடும் நால்வகை பக்தர்களுள் நான்காவது வகை பக்தியே இங்கு குறிப்பிடப்படுகிறது.

அன்பே வடிவமாய்த் திகழும் குழந்தைக்கு இது நல்லது இது தீயது என்ற வேறுபாடு கிடையாது. வீட்டைக் கொள்ளையடிக்க வந்து நிற்கும் கொள்ளையனிடமும் அது 'மாமா' என்று கை நீட்டிச் சிரிக்கும். பாம்பைக்கண்டால் அது அதனுடன் விளையாடத் தலைப்படும். தீயைக் கண்டால் அது அதைத் தொடப் போகும். அது போலவே பக்தனும் பக்தியின் மேலீட்டால் நன்மை தீமை இரண்டையும் மறந்து அப்பால் போய் விடுகிறான். குழந்தையும் தெய்வமும் ஒன்று என்று கூறுவதுபோல, பக்தனும் பகவானும் ஒன்றாகிவிடுகின்றனர்.

(தொடரும்)




# அன்னை காட்டிய அறவழி

"பாருக்குள்ளே நல்ல நாடு" எனப் போற்றப்படும் நம் பாரதத்தில் மட்டுமன்றி, பார் முழுவதும் நாகரிகத்தில் வளர்ந்து வரும் காலம் இது. வளர்ந்துவரும் இவ்வையகத்தில் ஆடவர்க்குச் சமமான மதிப்பைப் பெண்டிர்க்கும் அளிக்கப்பட்டுள்ளது என்பது வரவேற்கத் தகுந்த நிலையாகும். சீதை, நளாயினி, கண்ணகி போன்ற கற்பரசிகள் வாழ்ந்த நாட்டில் கலிதேவனின் ஆதிக்கம் மிகுந்து வருகிறதென்றால் அது வருத்தத்திற்குரியது. குறிப்பாக நாகரீகம் என்பது ஆண்களைவிட பெண்களை மிகவும் பாதித்துள்ளது. இக்கலிகாலத்தில் மட்டுமன்றி வேத காலத்திலும் பெண்கள், ஆண்களுக்குச் சமமான உரிமைகளைப் பெற்றிருந்தனர். மேலும் வேத நெறிப்படி வாழ்ந்து, உயர்ந்த பெண்களில் ஒருவர் அன்னை சாரதா தேவியார். அவரது உபதேசங்கள் சிலவற்றையும், வாழ்க்கையையும் விளக்கிப் பெண்டிரைச் சிறப்படையச் செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

"அரிதரிது மானிடராய்ப் பிறப்பதரிது" என்று மானிடப் பிறப்பின் பெருமை இயம்பப்படுகிறது. எனினும், "மங்கையராய்ப்பிறந்திட நல்ல மாதவம் செய்திடல் வேண்டுமம்மா" என்னும் கூற்று மானிடராய் பிறந்தாலும் மங்கையராய் பிறப்பதற்கு முன் பிறவியில் தவம் செய்திருக்க வேண்டும் என்பதன் மூலம் பெண் குலத்தைச் சிறப்படையச் செய்கிறது. இதில் மாதவம் என்றாலே சிறந்த தவம் என்றாகிறது. அதிலும் "நல்ல மாதவம்" என்பது தாய்க் குலத்திற்கு மேலும் மெரு கூட்டுகிறது. ஒரு பெண்ணின் வாழ்க்கை அப்பெண்ணின் பெற்றோர்களால் சிறப்படையும். தன் பெண்ணின் வாழ்க்கையில் நலம் நாடும் ஒவ்வொரு பெற்றோரும் தங்களது பெண் குழந்தைகளை ஆரம்பத்திலிருந்தே கண்டிப்புடனும், கண் காணிப்புடனும் வளர்ப்பது அவசியம். கண்டிக்க வேண்டும் என்பதற்காக கண்டபடி திட்டவும், அடிக்கவும் கூடாது. அது அவர்களின் மனநிலையைக் கெடுக்கும். மிகுந்த செல்லமாகவும் வளர்க்கக் கூடாது. இன்று பல பெற்றோர்கள் நாகரிக மோகத்தால் தங்களின் குழந்தைகளை நாகரிகமாக வளர்க்க முற்படுகின்றனர். இதுவே அக்குழந்தைகளின் பிற்கால வாழ்வை மட்டரகமாக்கிவிடும் என்று அறியார் போலும்? குழந்தைப் பருவத்தில் இறை பக்தியையும், இறையன்பையும் புகட்டினால் அக்குழந்தை ஆண்டவன் பால் அன்பு கொண்டு கலிகால நிலைகளால் மயக்கமுறாமல் பாதுகாக்கப்படும். இப்படிக்குழந்தை பருவத்தில் இறையன்பை வளர்த்துக் கொண்டவர் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார். மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்த தேவியார், இளம் வயதில் தன் பெற்றோர்க்கு அடங்கி நடந்து, தன் தந்தைக்குக் கழனி வேலைகளுக்கு உதவி செய்தார். மற்றும் பல குடும்பப் பணிகளை தாமே பொறுப்பேற்று நடத்தினார். ஆனால் இன்றைய நிலை அதற்கு விதி விலக்கு! மேலும் பெண்களுக்கு விவாகம் ஆகும் வரை பெற்றோரையே தெய்வமாக வணங்க வேண்டும். அன்னைக்கு, திருமணம் என்றால் என்ன என்பதை அறியாத இளம் பருவத்திலேயே விவாகம் செய்விக்கப்பட்டது. தன் கணவரை ஊரார் "பித்தன்" என்று கூறியது அன்னையாரின் உள்ளத்தில் வேதனையை வளர்த்தது. சாரதைக்கு வயது வந்தபோது ஸ்ரீ இராமகிருஷ்ணர் வாழ்ந்த தக்ஷிணேஸ்வரர் கோயிலில் அகத்தானைக் கண்டார். கண்டபோது ஏற்பட்டது கடவுள் எண்ணம். காதல் ஏக்கமல்ல! தெய்விக ஒளி வீசும் பரமஹம்சரை கடவுளாக சாரதை கண்டாரேயொழிய கணவராகக் காணவில்லை. அப்படியே பரமஹம்சரும் தன் மனையாளை நோக்கி, "சாரதா, உனக்கு வேண்டிய சுகங்களனைத்தும் இங்குத் தடையின்றிக் கிடைக்கும். உனக்கு இல்வாழ்க்கை வேண்டுமா? துறவு வாழ்க்கை வேண்டுமா?" என்று கேட்டார். அன்னை சாரதா தேவியார், தெய்விக மணம் கமழும் பரமஹம்ஸரைக் கண்டவுடன் பேரின்பலயத்தை நாடி கீழ்க் கண்டவாறு கூறினார்: "உங்களோடு சேர்ந்து ஆத்ம ஸாதனத்தில் ஈடுபடத்தான் எனக்கு விருப்பமே யொழிய உங்களை, பாவம் நிறைந்த இவ்வுலக வாழ்விற்கு இழுத்து வர விரும்பவில்லை" இக்காலத்தில் எந்தப் பெண் இப்படிக் கூறுவாள்? இளமையில் அதாவது ஒரு பெண், இளம் பெண்ணாக உள்ளபோது வாழ்க்கை சுகத்தை நாடுவாளே யொழிய துறவறம் விரும்பாள். ஆனாலும் மனதைக் கட்டுப்படுத்த வேண்டும். அதற்காகத்துறவறம்நாடவேண்டாம்

இளம் பெண்ணாக உள்ளபோது உள்ளத்தில் அலைபோல வீசுவது ஆசை எண்ணங்கள். இப்பருவம் இளம் பெண்களின் வாழ்வில் "புயல் வீசும் பருவம்" என வழங்கப்படுகிறது. ஏன்! ஒரு வாலிபனின் வாழ்விலும் தான். இது விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்தும். பெண்களின் நால்வகை குணங்களும் இப்பருவத்தில் கடைப்பிடிக்க வேண்டியவைகளே! இந்த இளமைப்பருவம் பழுக்கக் காய்ச்சிய இரும்பையொத்தது. இரும்பு சூடான நிலையில் உள்ள போது அதற்கு எவ்வடிவம் வேண்டுமாயினும் கொடுக்கலாம். அதுபோல இளமையில்பக்தி எண்ணங்களைவளர்த்தால் நல்ல பலன் தரும். அது வடிவம் கொண்ட இரும்பைப் போன்றது. மேலும் சில பெண்களுக்கு, அதாவது இளம்பெண்களுக்கு வேண்டியவைகளை காண்போம். முதலாவதாக அழகுக் கர்வம். இது அனைவரையும் ஆட்கொள்ளக் கூடியது. இதிலிருந்து, இதன் பிடியிலிருந்து தப்ப வேண்டும். இறைவனின் அழகை இரசிப்பதில் இன்பம் காணவேண்டும். தன்னழகை கொண்டு பெருமை படைக்கூடாது. இளமைத்திமிர் என்பது மற்றொரு மயக்கம். இளமை என்பது காலத்தால் வெல்லப்படும். இளமை என்றிருந்தால் முதுமையும் உண்டு. அடுத்தது சினிமா. இன்று புரைது வாழ்வு பாழ்படுவது இதனால்தான். கோவிலுக்கு சென்று வந்த முகமும், சினிமாவிற்கு சென்றுவந்த முகமும் காட்டும் நிலையிலிருந்தே இதன் இழிநிலை விளங்கும். இனி அன்னையின் வாழ்விற்கு வருவோம்.

சாரதா இளமையிலிருந்து துறவறத்தில் தம் கணவருடன் காலடி எடுத்து வைத்தபோது மற்றுமொரு கருத்தை மங்கையர் அனைவர்க்கும் நவில்கின்றார். கட்டிய கணவன் கயவனே யானாலும் அவனுக்குப் பணிவிடை செய்வதில் சுகம் காண்பவளே பத்தினி. அதனாலன்றோ, "கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்" என்றும் வாய்மொழி வந்தது. ஒரு குடும்பபெண்ணுக்கு அணிகலன்கற்பு. புராண காலத்தில் தோன்றிய பெண்கள் அனைவரும் கற்பால் உயர்ந்து தெய்வமாகக் காட்சியளித்தவர்கள். நளாயினி, பகலவனை உதிக்கவிடாமல் செய்தாள். எதனால்? தன் கற்பின் திறத்தால்! அதே வேளையில் ரேணுகா தேவி பரசுராமரால் தலையை இழக்கவில்லையா? இது அவளின் கண நேர ஆசையினால் நிகழ்ந்ததன்றோ? அடுத்ததாக ஒவ்வொரு குடும்பப் பெண்ணும் தன் கணவன் எடுக்கும் எந்த முடிவையும் சுமுகமான முறையில் தவிர்க்க வேண்டுமே யொழிய நேரடி எதிர்ப்பில் ஈடுபடுவதைத் தவிர்க்க வேண்டும். கணவனின் எண்ணமே மனைவியின் எண்ணமாகவும் அமையவேண்டும். இது அன்னையின் வாழ்வில் நடந்த சிறு நிகழ்ச்சியால் விளக்கலாம்.

ஸ்ரீ இராமகிருஷ்ணரின் தவ வாழ்வை விரும்பி அவருக்கு உதவி செய்ய முற்பட்ட ஒரு பக்தர் இராமகிருஷ்ணரிடம் பத்தாயிரம் ரூபாயை வங்கியில்போட அனுமதி கேட்டார். மண்ணாசை பெண்ணாசை துறந்த பரமஹம்சர் அதை ஏற்க மறுத்துவிட்டார். அதோடு மட்டுமன்றி, "அன்பரே! பணம் எனக்குவேண்டாம் நான் வேண்டாமல் கொடுக்கும் என் அன்னையே எனக்கு உதவுவாள்" எனப்பகர்ந்தார். பக்தர் ஆசையினால் தூண்டப்பட்டு தேவரிடம், "அப்படியானால் இதை நான் சாரதா தேவியிடம் கொடுத்து விடுகிறேன்", என்றார். "அவளுக்கு தேவையானால் ஏற்றுக்கொள்ளட்டும்" என்றார். அன்பர் அன்னையிடம் பெற்றுக் கொள்ள வேண்டியபோது, "அவர் விரும்பாத பணத்தால் எனக்குஎன்ன பயன்? அவர் விருப்பமே என் விருப்பம்" என்று சற்றுக் கடுப்புடன் பதில் கூறினார். குடும்ப நலன் நாடும் நன் மங்கையர்க்கு இப்பண்பு உதவும்.

இனி அன்னையின் அன்றாட வாழ்க்கை முறைகளைக் காண்போம். தக்ஷிணேஸ்வர காளி கோயிலில் ஒரு அறையில் அன்னையார் வாழ்ந்து வந்தார். அவர் மிகவும் அமைதியான வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்தார். "பின் தூங்கி முன் எழுவாள் பத்தினி" என்னும் நல்லுரைக் கேற்ப அன்னையார் அதிகாலை மூன்று மணிக்கு எழுந்து ஸ்நானம் செய்து விட்டு ஸ்தோத்திரத்தில் ஈடுபடுவார். நாள் முழுவதும் கடுமையான வேலைகள் இருப்பினும் அன்னையார் தியானத்தை கைவிடுவதில்லை. சாரதை மட்டுமன்றி பல்வேறு ஞானிகளும் இடைவிடாது தியானத்தை மேற் கொண்டவர்களே! இரவில் அனைவரும் துயிலச் சென்ற பிறகுதான் சாரதை துயிலச்செல்லுவார். கட்டுப்பாடு என்பது பெண்களுக்கு மிகவும் தேவையான ஒன்று. "மலரினும், மென்மையுடையவள்" என்று பெண்களின் இயல்பு கூறப்பட்டாலும், தனக்கு இன்னல் வரும்பொழுது புலியைப்போல் சீறி எழ வேண்டும். துன்பம் இழைப்பவரை தவிடு பொடியாக்க வேண்டும். முறம் கொண்டு புலியைத்துரத்திய வீரமகள் வாழ்ந்த நாடல்லவோ நம் நாடு? இப்படி பெருமையுற்ற நாட்டு மகளிர் வீரத்தால், துணிவால் சிறப்படைய வேண்டாமா? அன்னையின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சி வீர மங்கையர்க்கு அமைந்த வைர கிரீடம். சாரதா தேவியார் வாழ்ந்து வந்த இடத்தில் ஒரு கயவன் வாழ்ந்து வந்தான். சர்ப்பமுள்ள இடத்தில் தானே நாமும் வசிக்கிறோம்? அதுபோல தீயவர்கள் இவ்வுலகில் எங்கும் பரவியுள்ளார். அன்னையார் தனிமையில் இருந்த வேளையில் கீழான எண்ணத்தோடு அணுகினான். அப்பாவி கலிக்கு முடிவு கட்டும் காளியை வழிபட்டு வந்த தேவியார் பத்ரகாளியாகி பாவியை அடித்துப் பயந்தோடும்படி செய்தாள். இது வரை அன்னையின் வாழ்க்கை நிகழ்ச்சியின் அறிவுரைகள் சிலவற்றைக் காண்போம்.

ஸ்ரீ இராமகிருஷ்ணரின் தவ வாழ்விற்கு ஈடு கொடுத்து வாழ்ந்து வந்து தானும் தவசியாகி, பின் அன்னை மங்கையர்க்கு நல்கிய நல்லுரைகள் பல. ஆடவர்களை அரனாகவும், பெண்டிரை அம்பிகையாவும் வணங்க வேண்டும். " இராமகிருஷ்ணர் பெண்களைக் காணும் போதெல்லாம் இறைவியின் வடிவம் ஒன்றையே கண்டார். மேலும் "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்னும் கோட்பாடு பெண்களால்தான் சிறப்படைய வேண்டும். தான் பெற்ற பிள்ளைகளின் எதிர்கால நல்வாழ்விற்கு வித்திடுவதும் ஒரு பெண்தான். வீர சிவாஜியை உருவாக்கித் தந்தவளும் ஒரு பெண்ணல்லவா? இன்றைய நிலையில் "கழுத்தில் கனம்" இருந்தால் தான் மற்றவர்கள் மதிப்பார்கள் என்னும் மனநிலை பெண்களிடம் இருந்து அறவே ஒழிய வேண்டும். அகங்கார நிலைமை பெண்களிடம் மாற வேண்டும். தற்போது தலைமுடியை முன்புறமாக வைத்துக் கொள்வதை நாகரிகமாகக் கருதும் பெண்கள் அதை மாற்ற வேண்டுர். தரக்குறைவாக ஆடை அணிவதையும் மாற்றி நம் பாரதப் பண்பினைக் காக்க வேண்டும். இனி அன்னையின் ஆசியோடு முடிவிற்கு வருவோம்.

நாளுக்கு நாள் நாகரீகம் மிகுந்து வரும் நானிலத்தில் வாழும் பெண்கள் நாகரிக மோகத்தில் அகப்படாமல் நல்வழியை பின்பற்றி, பாவைக்கு பாதி உடல் அளித்த பரமசிவனின் மைத்துனனாகிய மாதவனின் அருள் பெற்று உய்வார்களாகுக!





# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி

**1) தரிசனம் மற்றும் சேவைகள் :**

**காலை**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | | 5-00 | முதல் | 5-30 | வரை |
| விஸ்வரூப ஸர்வதரிசனம் | | 5-30 | ,, | 7-00 | ,, |
| தோமாலசேவை (ஆர்ஜிதம்) நபர் ஒருவர்க்கு ரூ. 4/- | | 7-30 | ,, | 8-00 | ,, |
| அர்ச்சனை (ஆர்ஜிதம்) நபர் ஒருவர்க்கு ரூ 4/- | | 8-00 | ,, | 8-30 | ,, |
| ஸர்வதரிசனம் | | 9-00 | ,, | 12-30 | ,, |
| **மாலை** | | 1-00 | ,, | 6-00 | ,, |
| | | 7-00 | ,, | 8-45 | ,, |
| ஏகாந்த சேவை | இரவு | 9-00 | ——— | | |

(வெள்ளிக் கிழமை, ஏகாதசி, உத்திர நட்சத்திரம் மற்றும் பண்டிகை நாட்களில் விஸ்வரூப ஸர்வ தரிசனம் காலை 6-30க்கு முடிந்துவிடும் (காலை 5-30 முதல் 6-30 வரை)

| **2) ஆர்ஜித வாகனங்கள் :** | | **ரூ. காசு** |
|---|---|---|
| 1) கருடவாகனம் | — | 32–00 |
| 2) சந்திரப்பிரபை வாகனம் | — | 32–00 |
| 3) யானைவாகனம் | — | 32–00 |
| 4) குதிரைவாகனம் | — | 32–00 |
| 5) சிம்ம வாகனம் | — | 32–00 |
| 6) ஹம்ஸவாகனம் | — | 32–00 |
| 7) சிறிய சேஷவாகனம் | — | 32–00 |
| 8) பெரிய சேஷவாகனம் | — | 62–00 |
| 9) சூர்யப்பிரபைவாகனம் | — | 62–00 |

| **3) ஆர்ஜித செருப்பு :** | — | **ரூ. காசு** |
|---|---|---|
| 1) தோசை படி (¼ சோலா) | — | 35–00 |
| 1) தத்யோதனம் (¼ சோலா) | — | 40–00 |
| 3) புளியோதரை ,, | — | 50–00 |
| 4) பொங்கல் ,, | — | 55–00 |
| 5) சர்க்கரைப்பொங்கல் ,, | — | 65–00 |
| 6) சர்க்கரைபாத் ,, | — | 85–00 |
| 7) கேஸரிபாத் ,, | — | 90–00 |
| 8) ஸீரா ,, | — | 155–00 |

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆதலால் மாருதி நிச்சயமாக வ்யாகரண சாஸ்திரம் கற்றுத் தேர்ந்திருக்கிறார் என்று போற்றுகிறார்.

சரி, வ்யாகரணம் என்றால் என்ன? வ்யாகரணம் எவ்வாறு ஏற்பட்டது? சொற்களை ப்ரக்ருதி விக்ருதியாகப் பிரிக்கும் சாஸ்திரத்திற்கு வ்யாகரணம் என்று பெயர். வ்யாகரண சாஸ்திரம் ஏற்படுவதற்கு மூலகாரணமே பாணினிதான். பாணினியின் வேண்டுகோளின் பேரில்தான் சூத்திரங்கள் இறைவனிடமிருந்து வந்தன என்று வரலாறு கூறுகிறது.

**नृत्तावसाने नटराजराज :**
**ननाद ढक्कां नव पञ्चवारम् ।**
**उद्धर्तुकामस्सनकादिसिद्धान्**
**एतद्विमर्शे शिवसूत्रजालम् ।**

நிருத்தாவஸானே நடராஜராஜ:
நநாத டக்காம் நவபஞ்சவாரம
உத்தர்து காமாஸ்ஸனகாதி ஸித்தான்
ஏதத்விமர்சே சிவசூத்ர ஜாலம்''

நடராஜரானவர் ஸந்த்யா காலத்தில் தன்னுடைய நடனத்தின் இறுதியில் உடுக்கையை 14 முறை ஒலிக்கவும் அதிலிருந்து 'அயிஉண்ருலுக்' முதலிய 14 சூத்திரங்கள் வெளிவந்தன என்றும், அச்சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்டே பாணினி தன்னுடைய வ்யாகரண சாஸ்திர நூலை இயற்றினார் என்று வரலாறு கூறுகிறது.

வ்யாகரணம் ஒன்பது வகைப்படும். அவையாவன:

1. ऐन्द्र ஐந்த்ரம்
2. शान्तं சாந்தம்
3. काशकृत्स्नं காசக்ருஸ்னம்
4. कौमारं கௌமாரம்
5. शाकटायनं சாகடாயனம்
6. सारस्वतं ஸாரஸ்வதம்
7. आपिशलम् ஆபிசலம்
8. शाकलम् சாகலம்
9. पाणिनीयं பாணினீயம்

தற்போது வழக்கில் உள்ள சொல் இலக்கண நூல்களுள் பழமையானது பாணினியின் நூலே ஆகும். இதில் 8 அத்தியாயங்கள் உள்ளன. ஒவ்வொரு அத்யாயத்திலும் 4 பாதங்களாக 32 பாதங்கள் உள்ளன. அவற்றில் சுமார் 3981 சூத்திரங்கள் உள்ளன. இதில் 29 பாதங்களை ஒரு பகுதியாகவும், எஞ்சிய 3 பாதங்களை ஒரு பகுதியாகவும் பாணினி பிரித்திருக்கிறார். பாணினி, தாக்ஷி என்பவரின் குமாரராவர். आकुमारं यश: पाणिने: "ஆகுமாரம் யச: பாணினே: 'பாணினியைத் தெரியாத குழந்தையும் இல்லை'' என்று பதஞ்சலி மஹரிஷி கூறுகிறார். பாணினர், சலங்கி, சாலாதுரீயர் என்ற வேறு பெயர்களும் பாணினிக்கு உண்டு.

பாணினியின் சூத்திரத்தைப் புகழ்ந்து பராசர புராணம் "पाणिनीयं महाशास्त्रं पदसाधुत्वलक्षणं பாணினியம் மஹா சாஸ்திரம் 'பதசாதுத்வ லக்ஷணம்'' என்று கூறுகிறது. மேலும் பதமஞ்சரி கீழ்வருமாறு கூறுகிறது.

**उपासनीयं यत्नेन शास्त्रे व्याकरणं मतं ।**
**प्रदीपभूतं सर्वासां विद्यानां यदवस्थितम् ।।**

'' உபாஸனீயம் யத்னேன சாஸ்த்ரே
வ்யாகரணம் மதம்
ப்ரதீபபூதம் ஸர்வாஸாம் வித்யானாம்
யதவஸ்திதம்''

பாணினிக்குப் பிறகு அவர் சூத்திரங்களுக்கு உரையாக வரருசி, காத்யாயனர் போன்றோர் வார்த்திகங்கள் எழுதியிருக்கிறார்கள்.

பிறகு பாணினியின் சூத்திரத்திற்கும், வார்த்திகங்களுக்கும் உரையாக பதஞ்சலி மஹரிஷி 'மஹாபாஷ்யம்' என்ற நூலை எழுதினார். இதில் 85 ஆக்நிகங்கள் உள்ளன. பதஞ்சலியின் நூலைப் புகழ்ந்து பெரியோர்கள் "महाराज्यं शासनीयं महाभाष्यं वा पठनीयं" ''மஹா ராஜ்யம் சாசனீயம் மஹா பாஷ்யம் வா படனீயம்:'' 'ஒன்று மஹாராஜ்யம் ஆளவேண்டும் அல்லது மஹா பாஷ்யம் படிக்க வேண்டும்' என்ற சொல்லால் அறியலாம். பதஞ்சலி ரிஷி ஆதிசேஷனின் அவதாரம் என்றும், சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தில் அவர் இயற்றிய மஹாபாஷ்யத்தை ஆயிரக்கணக்கான சிஷ்யருக்கு போதித்தார் என்றும் வரலாறு கூறுகிறது. பதஞ்சலி மஹரிஷி மாணவர்களுக்குப் புரியுமாறு எளிமையான நடையில் சிறு சிறு வாக்கியங்களால் கருத்தைப் புரிய வைக்கிறார்.

வ்யாகரண சாஸ்திரத்தில் கீழ் வருமாறு கூறப்படுகிறது.

**वाक्यकारं वररुचिं, भाष्यकारं पतञ्जलिम्**
**पाणिनिं सूत्रकारं च प्रणतोऽस्मि मुनित्रयम् ।।**

வாக்யகாரம் வரருசிம், பாஷ்யகாரம்
பதஞ்சலிம்
பாணினிம் சூத்ரகாரம் ச ப்ரணதோஸ்மி
முனித்ரயம்

(அடுத்த இதழில் முடியும்.)

# யுகமும் சிருஷ்டியும்

தற்போது உலகத்தில் இறைவனு லும் சகிக்க முடியாத நிலையில் சகல துறைகளிலும் நீதிகள், தர்மங்கள், மனித பக்தி ரஸனை, மனித தேசபக்தி, ரஸனைகள் யாவும் அழிந்து வருகின் றன. அநீதிகள் செழித்து வளரும் இந்த நாளில் அதனை சம்ஹாரம் செய் வது கடவுளின் தர்மமாகும். அதற்கு ஒரே வழி உலக அழிவு அல்லது பிரளயம் என்பதுதான் இறைவனின் ஆக்ஞையாகும்.

**யுகங்கள் நான்கு வகைப்படும்**

1. கிருத யுகம், 2. த்ரேதாயுகம், 3. துவாபரயுகம், 4. கலியுகம்.

இந் நான்கு யுகமும் 1 சதுர் யுக மாகும். இது சந்தி அமிஸங்களால் உட்பட 12,000 தேவ வருடமாகும்.

இந்த சதுர் யுகம் 1000ம் கழிந் தால் பிரமனுக்கு 1 பகல் காலம். பின்னும் 1 ஆயிரம் கழிந்தால் பிர மனுக்கு 1 இரவு காலம் ஆகும்.

இப்படி 36 பகல் 36 இரவு கழிந் தால் பிரம்மா வருடம் ஒன்று ஆகும். இதுபோன்று 100 சென்றால் பிரம னுடைய ஆயுள் முடிவாகும் என்பது யுக புராண வரலாறாகும்;

இந்த ஆயுளின் முற்பாதியாகிய ஐம்பது வருடம் "பாத்மகல்ப" மென்றும், பிற்பாதியாகிய ஐம்பது வருடம் "வராக கல்பம்" என்றும் சொல்லப்படும். தற்போது நடப்பது வராக கல்பம் ஆகும்.

பிரம்மனது 1 பகற் காலத்தில் 14 மனுக்கள் அரசு செய்வார்கள்.

பிரமனது இரவு காலம் வரும் போது 'பிரளய காலம்' உண்டாகும். அந்த பிரளயத்தில் 3 உலகங்களும் அழியும்.

'வானத்தில் அகத்தியர் நட்சத் திரம்' என்று ஒரு நட்சத்திரம் தோன்றும் போது சமுத்திரங்களின் ஜலங்கள் உள்ளிழுக்கப்பட்டுவிடும் என்பது வரலாறாகும்.

**யுகங்களில் தேவதைகளின் பாதங்கள்**

1. கிருதா யுகத்தில் தர்மதேவதை நான்கு பாதத்தால் தூக்கும்.
2. த்ரேதா யுகத்தில் தர்மதேவதை இரண்டு பாதத்தால் தூக்கும்.
3. துவாபரயுகத்தில் தர்மதேவதை இரண்டு பாதத்தால் தூக்கும்.
4. கலியுகத்தில் தர்மதேவதை ஒரு பாதத்தால் தூக்கும்.

**யுக த்யானங்கள் (தெய்வசித்தி பெற)**

1. கிருதாயுகத்தில் த்யானமும்,
2. திரேதா யுகத்தில் த்யானமும், யாகமும்,
3. துவாபர யுகத்தில் யாகமும்,
4. கலியுகத்தில் தானம் செய்தல்.

இவை கருமங்கள் எனப்படும்.

**கலியுக தாத்பர்யம்**

தற்போது 28-வது சதுர்யுகம் நடக் கின்றது.

1. முதல்யுகம் – களங்க மார்க்கம்.
2. இரண்டாவது யுகம் – திராவக மார்க்கம்.
3. மூன்றாவது யுகம் – நவநீத மார்க்கம்.
4. நான்காவது யுகம் – பஸ்ம மார்க்கம்.

**கலியுகம் அழிவு**

1. முதல் யுகத்திற்கு நாள் 8
2. இரண்டாவது யுகத்திற்குநாள் 6
3. மூன்றாவது யுகத்திற்கு நாள் 4
4. நான்காவது யுகத்திற்கு நாள் 2

ஒரு தினத்திற்கு 60 நாழிகை ஆக நாள் 20 என்பதற்கு 43,20,000 நிமிடம் ஆகிறது.

மேற்குறித்த பஸ்மத்தை "கலி புருஷன்" என்று கூறுவர்.

மேற்படி கலி புருஷன் இரண்டு தினத்தில் முடித்து கற்பம் கொண்டு தேக சித்தியை திரிசியப் படாமல் தனது சங்கல்ப விகல்பங்களால் இவ் வுலகத்தை தோன்றலாதி அசைவுகள் செய்வித்து ஆடுகின்றான். இந்த

---

டாக்டர். கே. பாலசுப்ரமணியம்
குஞ்சரம்

---

உலகம் முழுவதற்கு ஏதுவான சூழ் நிலைகள் ஏற்பட சுமார் 23 வருடங் களாகும். இது அருட்பிரகாச வள்ளலாரின் ஜோதிவழி கணிப் பாகும்.

**யுக முடிவுக்குப்பின் சிருஷ்டி எப்படி?**

மூலப் பிரகிருதியினின்றும் உலகங் கள் எல்லாம் தோன்றுதல் சிருஷ்டி எனப்படும்.

பிரபஞ்சம் தோன்ற பிரமம், ஆன்மா, மாயை என முப்பொருள் தோற்றுவிக்கும் என்று சிருஷ்டியைக் கூறுவார்கள்.

மூலப் பிரகிருதியான மாயையில் பிரகிருதி தோன்றும். அதனிடத்து குணத்தத்துவம் தோன்றும். அக் குணம் சாத்விகம், இராஜதம், தாமதம் எனவாகும். நற்குண தத்துவத்தில் புத்தி தத்துவம் தோன்றும். புத்தி தத்துவம் குணத்திரயத்தை உடைய தாய் தோலினாலே மூடிக்கொள்ளப் பட்ட வித்துப் போல பிரகிருதியினாலே மூடப்பட்டிருக்கும். அதனின்றும் வைகாரிகம், தைஜசம், பூதாதி என்னும் அகங்காரங்கள் மூன்றும் தோன்றும். அவ்வகங்காரம் புத்தி தத்துவத் தாலே மூடப் பட்டிருக்கும்;

பூதாதி என்னும் அகங்காராங்களான தாமஸா அகங்காரங்களினின்றும் ''சத்ததன்'' மாத்திரை தோன்றும். அம்மாத்திரையினின்று ஆகாசம் தோன்றும். அவ்வாகாசம் தாமஸா அகங்காரத்தினுலே மூடப்பட்டிருக்கும். அவ்வாகாசம் விகாரப்பட்டு பரிசதன் மாத்திரையை உண்டாக்கும். அதனின்று வாயு தோன்றும். அதனுல் வாயுவின் குணம் பரிசமாயுற்று வாயுவும் ஆகாசவசமுடையது. வாயு விகாரப்பட்டு "ரூபதன்'' மாத்திரையினின்றும் தேயுத் தோன்றும், தேயு பரிசிதன் மாத்திரையினுலே மூடப்பட்டிருக்கும். தேயு விகாரப்பட்டு ''ரசதன்'' மாத்திரையை உண்டாக்கும். அதனின்று அப்புத் தோன்றும். அப்புவும் ரூபதன் மாத்திரையினுலே பொதியப்பட்டிருக்கும்.

அப்பு விகாரப்பட்டு கந்ததன் மாத்திரையை உண்டாக்கும். அதனின்று பிருதிவி தோன்றும். மூலப் பிரகிருதியும் மகத்துவம், அரூபம், அகங்காரமும் தன் மாத்திரையுமாக மஹா பூதங்களும் ரூபம் தசத்தினின்றும் ரூபமும் தோன்றும்,சத்தம் சோதி தோன்றும், சோதி மனத்திற் தோன்றும். மனம் புருஷனிற் தோன்றும்.

மேலே கூறப்பட்ட பஞ்ச பூதங்களும் கூடி சிருஷ்டியை விருத்தி செய்யும் ஆற்றல் இல்லாத வனவாக ''ஈசுர சக்தி'' அவற்றுட் கலந்து நின்று பஞ்ச கரணப்பட்டு பிரமாண்டத்தைத் தோற்றுவிக்கும்.

பிரபஞ்சம் அனைத்தும் சித்தும், சடமும் இரு கூற்றில் அடங்கும். சித்தின்றி சடம் இயங்காது. ஆகவே தோற்றும் திதிநாசம் என மூன்றுய் தோன்றும். தோற்றுவிக்கும் அச்சக்தி தான் பிரம்மா எனப்படும்.

திதி செய்யும் சக்தியாகிய கால வடிவம் விஷ்ணு எனப்படும். நாசம் செய்யும் சக்தி ருத்திரன் எனப்படும்.

ஒவ்வோர் அணுவையும் இம்மூன்று சக்திகளும் பற்றி நின்று தத்தம் முறையிலே தமது தொழில்களைச் செய்யும்.

மானுடமாகிய கணத்தை அவ்வக் கணத்திற்கு ஆதிதலைவனினும் பொருந்தும் வாயு உலகம், சனி தேயு லகம், சூரியன் அப்புலகம், சுக்கிரன் பிருதிவி உலகம் பூமி என, ஒவ்வொரு பூதத்திலும் மற்றைய நான்கு பூதங்களும் கூடியிருக்கும்.

தனி பூதங்கள், தன் மாத்திரைகள் தசயோகத்தில் பூதங்களும், உலகங்களும் தோன்றும்.

பிரம்மனை சிருஷ்டி கர்த்தா என்றும்
விஷ்ணுவை ரட்சகர்த்தா என்றும்
சிவனை சங்கார கர்த்தா என்றும் கூறுவர்.

சங்கார கிருத்தியும், சிருஷ்டியத் திதிகளுக்கு ஏதுவாகச் செய்யப்படுவது நாஸ்தியாக்கும் பொருட்டன்று. ஆதலால் சங்கார கிருத்தியத்தில் மற்றைய இரண்டு கிருத்தியங்களும் அடங்கும். ஆகவே சங்காரக் கர்த்தாவே மற்ற இருவரையும் அனுஷ்டித்து இனிது நடத்தும் முழு முதற் கடவுள் என்பார்கள்.

திரிபுரா சுரரை சங்காரம் செய்து திரிபுர தகனம் செய்யப்பட்டபோது சிவன், பூமியை இரதமாகவும், சூரிய சந்திரர்களை இரு சங்கரங்களாகவும் வேதங்களை 4 குதிரைகளாகவும் பிரமனை சாரதியாகவும், மேரு மலையை வில்லாகவும், சாகரத்தை அம்புக் கூடாகவும், விஷ்ணுவை பாணமாகவும் பூண்டு சென்றுர் என்றல் இதில் அதி அற்புத தத்துவங்கள் அடங்கி இருப்பது என நாம் தெள்ளத் தெளிவாக தெரிந்துகொள்ள வேண்டும்.

25 மூர்த்தி தலங்களில் 5வது மூர்த்தியான அர்த்த நாரீஸ்வர மூர்த்தி தலம் மட்டும் உலகம் முன் பிரளயம் அழிவு ஆனபோது இரிஷி விந்தியம் ஸ்ரீ அர்த்த நாரீசுரர் லிங்கம் மட்டும் அழியாது லிங்கத்தை தொடாமல் அதைச் சூழ்ந்து ஜலம் பிரளயம் கொண்ட சக்தி மிகு தலமாகும் இத்தலம்.

ஆரம்பமாகிய 'துன்மதி' ஆண்டுப் பிறப்பைப் பார்க்கும்போது நடக்கும் நிகழ்ச்சிகள்யாவும் முதற்கட்டமாகத் தோன்றுவதாக நமது உள்ளங்கள் எல்லாம் பேரலையாக இருப்பது, சிந்திப்பது, நன்கு தெரியும் ஒரு கலங்கரை விளக்கமாகும் என்பதில் ஐயமில்லை.

ஆதலால் நாம் அனைவரும் கூடுமானவரை சகல பாவத்திலும், அரசு உத்தியோகம், குடும்பம், தெய்வ பக்தி, தேசபக்தி, சகல பிராணிகளின் சுயசக்தி அறிந்து, சிறியவர், பெரியவர் என்கிற மரியாதை பக்தி, தன்னடக்க பக்தி, பெண்கள் பதிபக்தி, குடும்ப பக்தி, தான, தர்மங்கள், சகல க்ஷேத்திர தரிசனங்கள் யாவும் செவ்வனே செய்து வந்தோமானுல் பிரளயத்தில் நமக்கு நற்பயன் விளையும் என்பதில் ஐயமில்லை. நாஸ்திகத்தைத் தகர்ப்போம்! ஆஸ்திகத்தை வளர்ப்போம்! மானிட சக்திகளை நாம் வளர்த்தால் தெய்வசக்தி நம்மைக் காத்து ரட்சிக்கும் எனக் கூறி எல்லாம் வல்ல இறைவன் உலக மக்கள் அனைவருக்கும் சகல நன்மைகள் கிடைக்க அருள் செய்யவேண்டிக் கொண்டு பயபக்தியுடன் இக்கட்டுரையை முடிக்கிறேன்.

★

மூலமாகிய ஒன்றைத் தெரிந்துகொள்; பிறகு உனக்கு எல்லாம் தெரியவரும். ஒன்று என்ற இலக்கத்தின் பின் பூஜ்யங்களைச் சேர்த்தால், அது நூருகவும் ஆயிரமாகவும் ஆகின்றது. ஆனுல் அந்த ஒன்று என்னும் இலக்கத்தை அழித்துவிட்டால் மிகுந்திருப்பனவற்றுக்கு மதிப்பு இல்லை. ஒன்றினுல்தான் பலவற்றுக்கு யோக்கியதை யுண்டாகிறது. முதல் ஒன்று; பின்னர் பல; முதலில் ஈசுவரன், பின்னர் ஜீவனும் உலகமும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்.

# என் வாழ்க்கையில்....

நான் பெருமாளை மாதா மாதம் திருப்பதி சென்று கண்டு களிப்பதுண்டு. புதுக்கணக்கு போடும் ஏப்ரல் மாதம் முதல் தேதிக்கு முன்பாக மார்ச் மாதம் 30, 31ம் தேதிகளில் திருப்பதி சென்று பகவானை தரிசனம் செய்துவிட்டு வந்த பிறகு தான் புதுக்கணக்கு போடுவது வழக்கம். சுமார் 10 ஆண்டுகளுக்கு முன், கியூ வரிசை இப்போது உள்ளது போல் இல்லை. பஸ் வசதியும் இப்போது உள்ளது போல் இல்லை. நான் 10 வருஷத்திற்குமுன் மார்ச் மாதம் 31ம் தேதி பெருமாளை சேவிக்கச் சென்றேன். காலை வேலூரிலிருந்து புறப்பட்டு பஸ் டிக்கட் கியூவில் நின்று வாங்கி மலை மேல் செல்ல மாலை மணி 4 ஆகிவிட்டது. அன்று கோவிலில் நிறைய ஜனங்கள். நான் கியூவில் நின்று தரிசனம் செய்ய இருந்தேன். அப்போது கியூ கோவிலுக்குள் சுற்றி சுற்றி வரவேண்டும். நான் துணை இல்லாமல் தனியாகவே சென்று இருந்தேன். இரவு 10 மணி ஆகியும் நான் கியூவில்தான் இருக்கிறேன். பசி வேறு அதிகமாய் விட்டது. மறுநாள் ஏப்ரல் முதல் தேதி காலை 6 மணி அளவில் புதுக் கணக்கு போட வேண்டும். எனக்கு ஒன்றுமே புரியாமல் பெருமாளை நினைத்து மனம் உருகி நின்றேன். கண்களில் பக்தியால் நீர் வந்து கொண்டு இருக்கிறது. பெருமாளே என்னை ஏன் இப்படி சோதிக்கிறாய்? என்று மனம் உருகி வேண்டினேன். என்னை மறந்து கண்ணை மூடிக் கொண்டேன். சிறிது நேரம் கழித்து கண் திறந்து பார்த்த போது எதிர் வரிசையில் வந்து கொண்டு இருந்த செட்டியார் ஒருவர் என்னைப் பார்த்து 'முதலியாரே! நான் இருக்கிறேன். எனது காரில் வேலூர் போகலாம்' என்றார். பின் 11 மணிக்கு பெருமாளைத் தரிசித்து காலை 3 மணிக்கு கார்மூலம் வேலூர் வந்து காலை 6 மணிக்கு காலம் தவறாமல் புதுக்கணக்கு போட முடிந்தது. இந்நிகழ்ச்சியை நான் என்றும் மறக்க முடியவில்லை. பெருமாளை நினைத்து எந்த காரியத்தைத் துவக்கினாலும் என் வரை வெற்றிதான். மறக்க முடியாத என் தெய்வம் பெருமாள்.

திரு. டி. வீரராகவ முதலியார்,
வேலூர்.

சுமார் 10 வருடங்களுக்கு முன்பு நடந்த உண்மை நிகழ்ச்சி இது. நானும் எனது பெற்றோர்களும் திருமலைக்குச் சென்று ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளை தரிசித்து மறுநாள் காலை சுமார் 9 மணியளவில் திருப்பதியடைந்தோம். அங்கிருந்து திருச்சானூர் சென்று ஸ்ரீ பத்மாவதி அம்மையாரைத்தரிசித்துபிறகு திருத்தணி சென்று திருமுருகனை தரிசித்து வீடு திரும்புவதாகத் திட்டமிட்டிருந்தோம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக திருச்சானூர் செல்ல இயலவில்லை. மணியோ பகல் 1 மணியை தாண்டி விட்டது. ஆகையால் திருத்தணி போக முடிவு பண்ணினோம். ஆனால் அதற்கும் மாலை 4 மணி வரை பஸ் கிடைக்கவில்லை. ஆகையால் வீடு செல்ல முடிவு பண்ணி இரவு சுமார் 10-30 மணியளவில் செங்கல்பட்டையடைந்தோம். அங்கிருந்து 35 கி.மீ. தொலைவிலுள்ள கல்பாக்கத்தில் உள்ள எங்கள் வீட்டிற்குப் போக வேண்டும். சோதனைமேல் சோதனையாக கடைசி பஸ்ஸையும் தவற விட்டோம். மறுநாள் காலை 5 மணிக்குத் தான் அடுத்த பஸ்கிடைக்கும். ஆகையால் ஏதாவது சினிமா பார்த்து பொழுதைப் போக்கி விட்டு மறுநாள் பஸ் செல்ல எண்ணி, அருகில் உள்ள சினிமா கொட்டகைக்கு சென்றோம். அங்கு "திருமலை - தென் குமரி" என்ற சினிமா பார்த்தோம். அதில் நாங்கள் பார்க்கத் தவறிய திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருத்தணி திருமுருகன் கோயில் ஆகியவற்றைக் கண்டு களித்தோம். பார்க்க இயலாத குறையை சினிமா பார்த்ததின் மூலம் தீர்த்த ஸ்ரீவேங்கடேசப் பெருமாளின் அருளை எண்ணி எண்ணி வியந்தோம். மேலும் ஒரு அதிசயம் என்ன என்றால் சினிமா பார்த்து திரும்பியதும் இரவு சுமார் 1-30 மணியளவில் சினிமாக் கொட்டகையின் எதிரில் எங்கள் ஊருக்குச் செல்லும் பஸ் ஒன்று தயாராக நின்று இருந்தது. எங்களுக்கோ ஒரே வியப்பு! விசாரித்ததில் சென்னைக்குச் செல்லவிருந்த பஸ் செங்கல்பட்டு அடைந்ததும் பழுது அடைந்து விட்டதாம். அதை சீர்படுத்துவதில் மிகவும் தாமதமாகி கல்பாக்கத்திற்குக் கொண்டு போக முடிவெடுத்தனர். சினிமா சென்றவர்களில் சிலர் வருவார்கள் என அங்கு கொண்டு வந்தார்களாம். நாங்கள் அந்த பஸ்ஸில் ஏறி இரவு சுமார் 2-30 மணியளவில் எங்கள் வீடு திரும்பினோம்:

ஸ்ரீ பத்மாவதி தாயாரையும், திருத்தணி முருகனையும் பார்க்க இயலாத குறையை சினிமா பார்த்ததன் மூலம் போக்கியதையும், அந்த நள்ளிரவிலும் எங்கள் ஊருக்குச் செல்ல பஸ் கிடைக்கச்செய்த ஸ்ரீ வேங்கடவனின் அருளை எண்ணி எண்ணி இன்றும் வியக்கிறோம்.

ஜெ. கீதா,
கல்பாக்கம்.

மூன்று நண்பர்கள் சேர்ந்த குழுவுடன் 13-11-80 அன்று ஒரு தெய்வீக சுற்றுலா மேற்கொண்டு தமிழகத்தின் தலை நகரமாம் சென்னைக்கு அருகில் உள்ள தெய்வத்திருத்தலங்களை வழிபட்டு, காஞ்சி சென்று அன்னை காமாட்சியை தரிசித்து திருத்தணிகை சென்று தணிகை வேலவனை தரிசனம் செய்துவிட்டு 16-11-80 ஞாயிற்றுக்கிழமை மாலை திருப்பதி சென்றடைந்து திருமலை செல்லும் பேருந்தில் அமர்ந்தோம். மாலை சரியாக 5-45 மணிக்கு பேருந்து புறப்பட்டது. திருமலை நோக்கி பேருந்து சென்று கொண்டிருக்கும் பொழுது திருப்பதி திருமலை சாலையின் 4-வது கல் தொலைவில் ஒரு திருப்பத்தில் பேருந்து திரும்பிய உடன் திரும்பி 10 அடி கூட அந்த பேருந்து நகர்ந்திருக்காது. பேருந்துக்கு, முன்பாக மேலிருந்து விழுந்தது இரண்டு யானை வடிவம் உள்ள பெரியதோர் பாறுங்கல்! இன்னும் 1 அடி பேருந்து நகர்ந்திருக்குமேயானால் அந்த பேருந்தில் சென்ற சுமார் 40 பக்தர்களின் கதி? நினைத்தாலே உடல் புல்லரிக்கிறது! அந்த நேரத்தில் ஓட்டுநனரின் திறமையால் பேருந்து விபத்தில் இருந்து தப்பியது! அப்பொழுது ஓட்டுநனராக வந்தவர் திருமலையில் எழுந்

தருளி இருக்கும் ஸ்ரீனிவாசப் பெருமாளே! என நினைக்கத் தோன்றுகிறது. இதனில் எல்லாம் ஓர் அற்புதம் அந்தப் பேருந்தின் ஓட்டுனரின் இருக்கைக்குப் பின்புறம் எந்த ஒரு பேருந்திலும் இல்லாத ஒரு அற்புதம் என்னவெனில் விசேஷமாக அலங்கரித்து அற்புதப் பொலிவுடன் காட்சி தந்து கொண்டிருந்த திருமாலின் சங்கு, சக்கர நாமம் வரைந்த அற்புத ஓவியம்! அத்துடன் அந்தப் பாதை போக்குவரத்து தடைப்பட்டது. பின்னர் அங்கிருந்து நாங்கள் மூவரும் மனம் தளராமல் ஏழுமலையானைத் தரிசிக்க கால் நடையாகப் புறப்பட்டோம். செல்லும் சாலையில் ஓர் அற்புதம். காரிருள் சூழ்ந்து கொட்டும் மழையில் மலைப் பாதையில் தன்னந்தனியாக திக்கற்று ஒரு பெண்மணி தனது 5 மாத சேயுடன் செய்வதறியாது மயங்கிய நிலையில் தள்ளாடிச் சென்று கொண்டிருக்கும் சமயத்தில் நாங்கள் அந்த அவல நிலையைக் கண்டோம். இதையும் அவனது (திருமாலின்) சோதனையாகக் கருதி எங்களின் ஒருவர் அந்தக் குழந்தையை கையில் ஏந்திக் கொண்டோம். மற்றொருவர் அந்தப் பெண்ணை கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு கோவிந்தா என்ற நாமத்துடன் திருமலை வந்து அடைந்தோம்! இந்தப் பெரும் விபத்தில் தப்பியது,

தெய்வத் திருத்தலங்கள் பல சென்று வழிபட்டு வந்ததின் மகிமையா?

பேருந்தை திறம்பட ஓட்டி விபத்தில் இருந்து காத்தவர் ஓட்டுநரா? அல்லது ஓட்டுனர் வடிவத்தில் வந்தது ஸ்ரீவேங்கடேசப் பெருமாளா?

அந்த ஓட்டுனர்க்கு பின்புறம் விசேஷமாக அலங்கரித்து கெம்பீர பொலிவுடன் காட்சி தந்து கொண்டிருந்த சங்கு சக்கர நாமத்தின் மகிமையா?

நாங்கள் நடந்து செல்வது என்று முடிவு செய்தது அந்த ஐந்து மாத குழந்தைக்காக எங்களை நடக்க வைத்த அந்த எம்பெருமானின் உத்தரவா?

பதில்! திருமாலின் அற்புதக் கருணையே அது!

[நாங்கள் பயணம் செய்த பேருந்து எண். AAZ 2037].

நண்பர்கள்

ஆர். சென்னகிருஷ்ணன்,

என். கனகராஜ்,

வி. ஏ. நடராஜன்.

பொள்ளாச்சி.

---

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

வேறில்லை. பரம்பொருள் தான் மெய்ப்பொருள். அம்மெய்ப்பொருள் இல்லாத இடமில்லை. அனைத்திலும் அது இயங்குகிறது. அனைத்துமாகவும் அது திகழ்கிறது. எனவே, ''எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'' என்று உண்மை அறிவுக்கு விளக்கம் தருகிறது திருக்குறள். இதைத்தான் பகவத் கீதையும்,

'' யோ மாம் பச்யதி ஸர்வத்ர
ஸர்வம் ச மயி பச்யதி,
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி
ஸ ச மே ந ப்ரணச்யதி ''

என்ற சுலோகத்தின் மூலம் அனைத்திலும் பரம் பொருளையும், அனைத்தையும் பரம்பொருளாகவும் காண்பவனே உண்மை அறிவு படைத்தவன் என்று கூறுகிறது.

''தன்னையறியத் தனக்கொரு கேடில்லை?'' என்ற பொய்யா மொழியை நாமறிவோம். 'என்னில் உலகம் அடக்கம்' என்பதே வேதாந்தியின் முடிவு. தன்னை மென்மேலும் ஆராய்ச்சி செய்து கொண்டு போகும் அவன், இறுதியில் தன்னில் தானும் லயித்து விடுகிறான். தற்காலத்தில் மிகவும் முன்னேறியிருக்கும் பௌதிக ரசாயன சாஸ்திரங்கள் இறுதியில் எந்த நிலையில் சென்று முடியும் அல்லது எந்த நிலையில் பரிபூர்ணத்தை அடையமுடியும் என்ற கேள்விக்கு விவேகானந்தர் அழகாகப் பதில் தருகிறார். சக்தியின் பல்வேறு தோற்றங்களிடையே ஏற்படும் மாற்றங்களை ஆராய்கிறது பௌதிகம். அதுபோல் ரசாயன சாஸ்திரம் பொருளிடத்து ஏற்படும் மாற்றங்களை ஆராய்வதை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இப்படியே விரிவடைந்து கொண்டு போகும் பௌதிகம் இறுதியாக எந்த ஒரு ஆதி சக்தியிலிருந்து அனைத்து இதர சக்திகளும் தோன்றியிருக்கின்றனவோ அந்த மஹாசக்தி அல்லது பாரசக்தியை உணர்ந்தவுடன் முற்றுப் பெற்று விடும். அதுபோல் எந்த ஒரு மூலப் பொருளிலிருந்து அண்டத்தில் காணப்படும் அனைத்துப் பொருள்களும் தோன்றினவோ அந்த மூலப் பொருளைப் பற்றிய உண்மையை உணர்ந்தவுடன் ரசாயன சாஸ்திரத்தின் வளர்ச்சி முற்றுப் பெற்று விடும். அந்த நிலைமையில் விஞ்ஞானத்தின் முடிவும் வேதாந்தத்தின் முடிவும் ஒன்றித்து விடுகின்றன.

எனவே விஞ்ஞானமும், வேதாந்தமும் முரண்பட்டவையல்ல, ஒன்றையொன்று சார்ந்தவை என்பது மேற்கூறியதிலிருந்து புலனாகிறது. இரண்டினுடைய ஆராய்ச்சிகளின் நோக்கம் அடிப்படை உண்மைப் பொருளைப் பற்றிய ஆராய்ச்சியேயாகும். விஞ்ஞானத்தினுடையது புற ஆராய்ச்சி; வேதாந்தத்தினுடையது அக ஆராய்ச்சி. ஒரே மூலப்பொருளின் மாறுபட்ட தோற்றங்களே பலவாகக் காட்சி தருகின்றன என்பதை விஞ்ஞானமும், வேதாந்தமும் ஒப்புக் கொள்கின்றன. இத்தகைய வேற்றுமையில் ஒற்றுமையே இயற்கையின் தனி எழிலாகும். இந்த அடிப்படை உண்மையை உணர்ந்து அதற்கொப்ப ஒவ்வொருவரும் தங்களது வாழ்வை அமைத்துக் கொள்வார்களேயாகில் மனித குலம் உய்வடையும் நாள் வெகு தொலைவிலில்லை என்பது உறுதி. இன்று மனித குலத்தை எதிர்நோக்கியிருக்கும் பற்பல சிக்கல்களை எளிதில் தீர்ப்பதற்கான ஒரே வழி, விஞ்ஞானம் வேதாந்தம் ஆகிய இரண்டினுடையவும் துணைகொண்டு மனிதகுலம் ஒன்றுதான் என்ற அடிப்படை உண்மையை உணர்ந்து அதற்கொப்ப நடந்து கொள்வதேயாகும்.



# திருமலை ஒழுகு

ஸகிபிஸ் ஸஹிதா யூயம்
ஸமாகச்சத தத்ர வை ।
விஹாரயோக்யோ தேசோऽயம்
நிர்திஷ்டோ முநிநா மம ॥
இத்யுக்த்வா பகவாந் ப்ராஹ
ஸேநாபதி மரிந்தமம் ।
த்வதியாநுசரை ஸ்ஸார்த்தம்
ஸர்வைః பாரிஷதைர் யுதः ॥
ப்ரஹ்மாத்யைः த்ரிதசைஸ் ஸார்த்தம்
யக்ஷரக்ஷோகணாந்விதைः ।
ஸித்தவித்யாதரைச்சாபி கிந்நரைச்ச
ஸஹோரகைः ॥
ஸர்ஷிஸங்கைர் யுதः சீக்ரம் த்வம்
ஹி சேஷாசலம் ப்ரதி ।
வஸ்தவ்யம் யத்ர ஹி மயா ரமயா
ஸஹிதேந வை ॥
அநுக்ரஹாய லோகாநாம் நித்யஞ்ச
ப்ரயதாத்மநாம் ।

இத்யாதியாலே பெரிய பிராட்டிமார்களையும் ஸூரிகளையும் நீங்களும் ஸபரிகரராய் வாருங்கோள் என்று நியமித்து,

இத்யுக்த்வா பகவாந் ஸார்த்தம்
ச்ரியா பூம்யா ச நீலயா ।
விநதாஸூத மாரூடோ யயா
வஹிமஹீதரம் ॥

இத்யாதியாலே க்ஷீராப்திசாயியானவன் தானே திருமலையில் எழுந்தருளினன் என்னும் அர்த்த விசேஷம் புராணஸித்தமாகையாலே, க்ஷீராப்திசாயிக்கும், திருவேங்கடமுடையானுக்கும் வஸ்த்வைக்யம் (பொருள் ஒற்றுமை) ஸித்தமேயாகிலும், பூர்வபாவித்வபச்சாத்பாவித்வங்கள் (முன் உண்டானது பின் உண்டானது என்னும் வேற்றுமை) உண்டாகாமை பற்றி எம்பெருமானார் திருச்சித்ரகூடத்திலே க்ரிமிசண்டன் வ்யாஜமாக மூலபேரம் கருங்கடலிலே புகுருகையாலே அந்த மூல பேரமான கருமாகடலுள் கிடந்தானையும் ஆவாஹனம் பண்ணிக் கொண்டு, உத்ஸவ பேரமாம் எழுந்தருளின தேவாதி தேவனுக்குமூலவிக்ரஹமாகக்ஷீராப்திசாயியைத் திருமலை யடிவாரத்திலே திருப்ரதிஷ்டை பண்ணுவிக்கையாலும், அங்குண்டானபடியே, ஹரிவம்சே, புஷ்கரோபாக்யாநே, ஸப்தவிம்சத்யுத்தர சதாத் ஊர்த்வ ப்ரகரணே,

ததः சயாநம் ஶ்ரீமந்தம்
பஹுயோஜநவிஸ்த்ருதே ।
பத்மநாபம் ச விச்வேசம்
ப்ரணிபத்யோசதுः ஸ்துதிம் ॥
ஜாநீம ஸ்த்வாம் விச்வயோநிம்
ஏகம் புருஷஸத்தமம் ।
தபः பாலநஹேத்வர்த்தம் ஆகதௌ
வித்தி நௌ ஸதா ॥
என்றும்,

ஶ்ரீ வைகாநஸ ஸங்க்ரஹே :-
பாதபார்ச்வே ததா பித்தௌ
காரயேந் மதுகைடபௌ ।
ஜாநுமாத்ரஸமுத்ரஸ்தௌ
உக்ரவேஷஸமந்விதௌ ।
தஹ்யமாநா வநந்தஸ்ய விஷஜ்வாலாபி
ரேவ தௌ ।

என்னும் ப்ரமாண முள்ளபடியாலே மதுகைடபர்களாயும் ஸந்நிதியிலே ஸேவித்துக் கொண்டிருக்கும் விக்ரஹமாக ப்ரதிஷ்டை பண்ணி வைத்தும் சென்று வாராநின்ற நல்லடிக் காலத்திலே,

காசிராஜாவானவன் அநபத்யனாய் ஸந்தானார்த்தமாக ஸகுடும்பனாய்த் திருமலையிலே திருவேங்கடமுடையானைப் பக்தியுடனே ஸேவித்து நிற்க, அவ்வளவில், அன்று அவன் மஹிஷி ஸ்வப்நத்தில் திருவேங்கடமுடையான், "நான் உனக்கு ஸந்தானம் தருகிறேன்: எனக்கு உன் ரஸாமணியைத் தா" என்ன, அவ்வளவில் அந்தராஜமஹிஷியும் பர்த்ருபரவசை (கணவன் வழி நிற்பவன்) யாகையாலே, "பர்த்தாவின் அநுமதிவேணும்" என்ன, அவ்வளவில் திருவேங்கமுடையானும் "உனக்கப்படி அபிஸந்தி (எண்ணம்) யுண்டாச்சுதாகில், எனக்கும் என் அண்ணா கோவிந்தராஜன் அநுமதி வேணும்" என்ன, இப்படி அற்புதமான ஸ்வப்நவ்ருத்தாந்தம் உண்டாகையாலும், கோவிந்தராஜனுக்கும், திருவேங்கடமுடையானுக்கும் அண்ணாவென்றும் தம்பியென்றும். திருநாம ப்ரஸித்தி ஸர்வ தேசத்திலும் உண்டாச்சுது: இந்த ஐதிஹ்யம் சிரோபாஸிதர் சொல்லுவது.

வ்யாஸம் தச்சிஷ்ய மாத்யம் முநிமபி
விதிதம் ப்ரஹ்மநந்தீதி நாம்நா
நாதார்யம் பத்மநேத்ரம் ரகுவர மத
தம் யாமுநேயம் மஹாந்தம் ।
பூர்ணம் ராமாநுஜாக்யம் முநிமபி
குருகாநாயகம் விஷ்ணுசித்தம்
வந்தே தேவாதிராஜம் ரகுவரஸஹஜம்
தேசிகம் வேங்கடேசம் ॥

இது ப்ரஹ்மதந்த்ர ஜீயர் ஶ்ரீ பாஷ்ய ஸம்ப்ரதாய க்ரம ஶ்ரீ ஸூக்தி.

ஶ்ரீசேஷாசலநாயகஸ்ய ஜகதாம்
தாதஸ்ய வாக்யாத் பரம்
தாதேத்யாதரதோ ஹி யஸ்ய மஹிமா
லோகே ப்ரஸித்திம் கதः ।
தம் தாதஸ்ய ச தாத மார்யசரணம்
ஶ்ரீசைலபூர்ணம் குரும்
ப்ரஜ்ஞா பக்தி விரக்தி சாந்தி கருணா
பாதோநிதம் ஸம்ச்ரயே ॥

(பார்த்வாஜகுலீந மாச்ரிதநிதிம்
ப்ரஜ்ஞாநிதிம் ஸம்ச்ரயே, இதி ச பாடः)

ஶ்ரீமாந் பாபவிநாசநாஹ்வய
ஸரஸ்தீர்த்தே ந பூர்ணம் கடம்
த்ருத்வா மூர்த்தநி வேங்கடாசலபதே
ராராதநார்த்தம் மஹாந் ।
யோகீந்த்ரஸ்ய ச மாதுலः கலிரிபோः
ஸூக்திம் வத ந்நாதிமாம்
தத்தே பக்திபரிப்லுதः ப்ரதிதிநம்
ஶ்ரீசைலபூர்ணோ குருः ॥
இத்தம் வேங்கடபூதரே குருவரः
ஶ்ரீசைலபூர்ணோ ஹரேः
கைங்கர்யம் ஸுமநோஹரம் ப்ரதிதிநம்
குர்வ ந்நலம் பக்திதः ।
வேஷம் சாபரமுத்வஹந்
ச்ரிதஜநவ்யாமோஹத ச்சைகதா
மத்யே ஸத்பத மார்யவர்யபுரதः
ஶ்ரீநாயகோऽத்ருச்யத ॥
தாபார்த்தாய திசாத்ய மஹ்யமுதகம்
தாதேதி வாக்யம் ஹரேः
ச்ருத்வா சாபசராந் ததோ
த்ருதவதः சேஷாசலாதீசிதுः ।
ஸாமோதம் சபராக்ருதேர் குருவரः
ஶ்ரீசைலபூர்ணோ மஹாந்
மாயா ஶ்ரீசக்ருதேதி பக்திபரிதோ
விஜ்ஞாய நோ தத் ததௌ ॥
ப்ராவண்யாத் குருஸார்வபௌம
விஷயாத் தீர்ததம் ததியம் ததः
பாதும் பத்தமநாः புந ச்சரவராத்
கருத்வா ஸரந்த்ரம் கடம் ।
தஸ்மி ந்நிர்கதமம்பு தத் கரயுகாத்
பீத்வா யதாவாஞ்சிதம்
ஶ்ரீமாந் சேஷகிரீச்வரோ ஹரிரபி
ப்ராப்தச்ச த்ருப்திம் பராம் ॥

(தொடரும்)



## ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளின் (பாலாஜி) பாத கமலங்களில் அஞ்சலி அளிக்கும் திவ்யாஞ்சலி— பக்தர்களின் சேவைக்கு அர்ப்பணம்

# ANJALI®
# Pooja Box

தினசரி பூஜைக்காக
ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள்—ஸ்ரீ பத்மாவதி தேவி
சிறப்பாகச் செதுக்கப்பட்ட படங்கள் உருவங்கள்
மென்மையான சந்தன மரத்தின் சிறப்பும் நறுமணமும்

- புத்தகம் போன்ற வடிவம்-கைக்கு அடக்கமானது.
- வசதியான அமைப்பு-ஆனால் இலேசானது.
- காற்று புகாத மூடி-4 உள்ளறைகள்.
- இல்லத்தில் மட்டுமின்றி, வேறு எங்கு சென்றாலும் நீங்கள் உங்கள் பூஜையைச் செய்து வழிபடலாம்.




**10 அஞ்சலி தூபக் குச்சிகள்-மற்றும் திருமலை படங்கள் அடங்கிய பலவண்ண வெளியீடு**






**விநியோகஸ்தர்கள் :**

**ஆந்திரா :** மகாவீர் என்டர்பிரைஸஸ், 4-1-938, திலக் ரோடு, ஹைதராபாத்-500001. போன்: 34819

**தமிழ்நாடு :** நாயக் இன்டர் நேஷனல், 56, புரசவாக்கம் ஹைரோடு, முதல் மாடி, சென்னை-600007. போன் : 32234

**கர்நாடகம் :** ஹீரா ஏஜென்ஸீஸ், 35, கும்பர் பேட், பெங்களூர்-560002. போன் : 24310

**கேரளா :** விஜய் டிரேடிங் கார்ப்பரேஷன், V/700, டார்க் காம்பௌண்டு, நியூ ரோடு, கொச்சி-682002.

# ராசிபலன்

(1-6-81 முதல் 30-6-81 வரை)

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

## மேஷம்

([illegible]ணி, பரணி, கிருத்திகை முதல் [illegible]தம் முடிய)

[illegible] நஷ்டம் அல்லது வீண் செல[illegible]ங்கள் மற்றும் கருத்து வேறு[illegible] அல்லது ஒரு சிறிது அலு[illegible] கவலைகள். வீட்டில் திருடு[illegible] அல்லது ஒரு பொருளை இழத்[illegible]. [illegible]ற்றூர் உறவினருடன் பிரிவு. [illegible]களால் ஏமாற்றப்படல். [illegible] சம்பந்தப்பட்ட நோயினால் [illegible]வதியுற நேரிடலாம். 14-ம் தேதிக்[illegible] பிறகு நாட்கள் நல்லனவாக [illegible]மையும்.

[illegible] நாட்கள்

[illegible]ணி: 4, 13, 21, 23.

[illegible] 1, 3, 12, 14, 20, 22, 24.

[illegible]திகை முதல் பாதம்: 4, 11, [illegible], 23.

## விருஷபம்

([illegible]த்திகை 2-ம் பாதம் முதல், [illegible], மிருக சீரிஷம் 2-ம் பாதம் [illegible])

[illegible] வரவு, மதிப்புயர்தல், நல்ல [illegible]கள், எனினும் பிள்ளைகள் அல்[illegible]ங்கள் காரணமாகக் கவலைக் [illegible]குல். மாதத்தின் முதல் 15 [illegible]ளின்போது வயிறு சம்பந்தப் [illegible] தொந்தரவுகளினால் அவதி[illegible] அல்லது பிரயாணம் அல்லது [illegible] உடல்நலம் கெடல். மொத்தத்[illegible] இம்மாதத்தில் குறிப்பிடத்தக்க [illegible]ச்சிகள் எதுவும் அமையாது.

[illegible] நாட்கள்

[illegible]த்திகை 2, 3, 4 பாதங்கள்: 1, [illegible], 5, 12, 23, 25.

[illegible]ணி: 1, 7, 14, 17, 22, 24, 26;

[illegible] சீர்ஷ 1, 2 பாதங்கள்: 1, 6, [illegible], 25.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

முதல் மூன்று வாரங்களின்போது கேளிக்கைகளில் ஈடுபடுவர். எனினும் உறவினர்களால் கவலைக்குள்ளாதல் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது உற்றூர் உறவினருடன் பிரிவு. தவறான ஆலோசனையைக் கேட்பதனால் பண நஷ்டம். மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுறல்.

நல்ல நாட்கள்

மிருக சீர்ஷ 3, 4 பாதங்கள்: 4, 8, 15, 18, 25, 27.

திருவாதிரை: 3, 5, 9, 17, 19, 26, 28;

புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள்: 1, 8, 13, 15, 16, 25, 27, 29.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

உடல்நல மேன்மை, கேளிக்கைகளில் ஈடுபடல், வெற்றி, மதிப்புயர்தல், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள். தீய எண்ணங்கொண்டோரால் தனக்கு வர வேண்டியன வராமற்போவதால், வாழ்க்கையில் சலிப்பு ஏற்படல். அவ்வப்போது பிரயாணம், இறுதி வாரத்தில் மகிழ்ச்சி.

நல்ல நாட்கள்

புனர்பூசம் 4-ம் பாதம்: 1, 3, 6, 12, 20, 27, 29.

பூசம்: 2, 7, 11, 19, 21, 28.

ஆயில்யம் 1, 5, 6, 12, 18, 20, 22, 27.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

பண வரவு, அதிக மகிழ்ச்சி, மதிப்புயர்தல் எனினும் அதிக வீண் செலவினங்கள். மாதத்தின் இரண்டாம் 15 நாட்கள் நல்லனவாக அமையும். பொதுவாக, சிறிது கவலைகள் இருந்தாலும், இவ்ராசிக்காரர்கள் இம் மாதத்தின்போது மகிழ்ச்சியாகவே விளங்குவர்.

நல்ல நாட்கள்

மகம்; 2, 4, 9, 13, 21, 23, 28.

பூரம்: 3, 5, 8, 13, 20, 22, 24, 29.

உத்திரம் முதல் பாதம்: 2, 4, 13, 21, 23, 30;

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பண வரவாயினும், உள்ளத்தில் மகிழ்ச்சியிருக்காது. உடல் நலம் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல். ஆனால் மாதத்தின் இரண்டாம் 15 நாட்களின்போது அல்லது கடைசி வாரத்தின்போது, நிலைமை சற்று மாறும். பிரயாணம் அல்லது உடல் நலம் கெடல் அல்லது உற்றூர் உறவினருடன் பிரிவு.

நல்ல நாட்கள்

உத்திரம் 2, 3, 4 பாதங்கள்: 4, 6, 13, 23, 25, 29.

ஹஸ்தம்: 5, 12, 14, 16, 22, 26.

சித்திரை 1, 2 பாதங்கள்: 4, 6, 10, 11, 16, 23, 25.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை அல்லது

பிரயாணமும் களைப்பும் அல்லது பண நஷ்டம். சத்காரியங்களில் ஈடுபடுதல் கவலைகளை மறக்கச் செய்யும். ஏமாற்றங்களுக்குள்ளாதல் மற்றும் கருத்து வேறுபாடுகள் தோன்றல். நிதி நிலைமை சற்று கடினமானதாக அமையும். மனயமைதிக்காக ருத்ராபிஷேகம் செய்தல் அறிவுறுத்தப்படுகின்றது.

நல்ல நாட்கள்

சித்திரை: 3, 4 பாதங்கள்: 6, 8, 13, 18, 25, 27.

ஸ்வாதி: 5, 9, 14, 19, 26, 30.

விசாகம் 1, 2, 3 பாதங்கள்: 1, 6, 8, 13, 18, 25.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல், மனைவியுடன் கருத்து வேறுபாடுகள், தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல். எனினும் பண வரவு, நண்பர்கள், முயற்சிகள் யாவும் வெற்றியடைதல், புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல்.

நல்ல நாட்கள்

விசாகம் 4-ம் பாதம்: 1, 10, 12, 15, 20, 27.

அனுஷம்: 2, 11, 21, 30.

கேட்டை: 8, 10, 12, 15, 16, 22, 27.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல். பெண்கள் மூலமாக தொல்லைகள் ஏற்படுவதாலோ அல்லது கருத்து வேறுபாடுகளினுலோ மனயமைதி இழத்தல். மாதத்தின் இரண்டாம் 15 நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினுல் அவதியுறல். கடைசி வாரத்தின்போது கேளிக்கைகளில் ஈடுபடல், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள்.

நல்ல நாட்கள்

மூலம்: 2, 4, 11, 13, 19, 23, 30.

பூராடம்: 3, 5, 12, 18, 22.

உத்திராடம் முதல் பாதம்: 2, 4, 11, 13, 18, 23, 27.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

பண வரவு, தானிய வகைகள் கிடைக்கப் பெறல், தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல் அல்லது உடல் நலம் கெடல். பிள்ளைகள் அல்லது பெண்கள் காரணமாகக் கவலைக்குள்ளாதல். தீய எண்ணங் கொண்டோரால் கருத்து வேறுபாடுகளுக்கு உள்ளானுலும், இரண்டாம் வாரத்தின் போது வெற்றி. கடைசி வாரத்தின் போது பெண்களினுல் துன்பத்திற்குள்ளாதல். மொத்தத்தில் இம்மாதம் திமை பயக்கும்படியாக அமையாது.

நல்ல நாட்கள்

உத்திராடம் 2, 3, 4 பாதங்கள்: 4, 6, 13, 15, 21, 25.

ஸ்ரவணம்: 3, 5, 14, 26.

அவிட்டம் 1, 2 பாதங்கள்: 4, 8, 13, 15, 21, 25.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

பிரயாணமும் களைப்பும் அல்லது ஒரு சிறிது உடல்நலம் கெடல், உற்ருர் உறவினருடன் பிரிவு அல்லது உற்சாகம் குன்றியிருத்தல், உடல் நலம் கெடல், விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல் குடும்பத்திற்கு வெளியே ஏற்படும் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். எனினும் பண வரவு, முயற்சிகளில் வெற்றி.

நல்ல நாட்கள்

அவிட்டம் 3, 4 பாதங்கள்: 6, 8, 15, 16, 18, 27.

சதையம்: 2, 7, 9, 17, 24, 26.

பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள்: 6, 15, 18, 23, 27.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

அவ்வப்போது பிரயாணம், கேளிக்கைகளில் ஈடுபடல், தவருன வழியில் பண வரவு அல்லது பிள்ளைகள் மூலம் பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி, புதிய நட்புறவுகள். இறுதி வாரத்தின் போது விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல்.

நல்ல நாட்கள்

பூரட்டாதி 4வது பாதம்: 8, 12, 18, 20, 25.

உத்திரட்டாதி: 2, 5, 9, 21.

ரேவதி: 6, 12, 18, 22.

குறிப்பு: நல்ல நாட்கள் என்பன பண வரவினை அல்லது மகிழ்ச்சியினை அல்லது வெற்றியைக் குறிக்கும்.



---

அடுத்துவரும் செப்டம்பர் 81ம் மாதம் முதற்கொண்டு ஒவ்வொருமாதமும் வரும் இந்து சமய விழாக்களின் வரலாற்றுச் சிறப்புக்கள், புராணச் சிறப்புக்கள் போன்றவற்றை மனதிற் கொண்டு கதை, கட்டுரைகளை எங்களுக்கு 31-7-81-க்குள் வந்து சேருமாறு அனுப்புங்கள். பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்குத் தகுந்த சன்மானம் வழங்கப்படும்.

(ஆ-ர்.)

---

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. | 2500/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. | 750/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. | 1500/- |
| ஊஞ்சல் சேவை | ரூ. | 1000/- |
| தெப்போத்ஸவம் | ரூ. | 1500/- |

| ஸேவைகள் | | |
|---|---|---|
| அமந்த்ரணோத்ஸவம் | ரூ. | 200/- |
| பூராபிஷேகம் | ரூ. | 500/- |
| ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. | 2500/- |
| திருப்பாவாடை | ரூ. | 5000/- |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. | 1745/- |
| ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. | 2000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. | 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. | 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ | 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. | 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. | 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. | 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

---

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதனை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக் கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதனையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதனையோ காண்பிக்காவிட்டால், அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

ஸ்ரீ வேங்கடேஸ்வர பரப்ரஹ்மணே நம:

# நீ ஒரு இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அருட்பெரும் ஞானியர் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட
# மேன்மைமிக்க இந்து சமயம்

உண்மையான ஒரு இந்துவாக செயல்படு — கீழ்க்கண்டவற்றைக் கடைப்பிடி

- உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு, விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.
- தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது தியானத்திலிருந்து பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஏதாவது ஒன்றை அல்லது
உனக்கு விருப்பமானதைத் தேர்ந்தெடு

ஸ்ரீ வேங்கடேசாய நம:
ஓம் நமோ பகவதே வாஸுதேவாய
ஓம் நமோ நாராயணாய
நமசிவாய

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே

- தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.
- வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.
- உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்காரி' எனும் முத்திரையினை ஒட்டவும்.
- தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.
- சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

---

**அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்**

---

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

